4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண்: எம். 8794.

கதிர் 10] மதுரை 23-11-72 வியாழன் [மலர் 275

## போடியில் துப்பாக்கி சூடு

போடி, நவ. 22—

நேற்று மாலையில் இங்கு ஆர்ப்பாட்டம் செய்த மாணவர்கள் மீது போலீசார் நடத்திய துப்பாக்கிச் சூட்டில் 6 பேர் படுகாயமுற்றனர்.

அ. தி. மு. க.வினரைப்பற்றி இழிவாகப் பேசியதற்காக இத்தொகுதி தி. மு. க. எம். எல். ஏ. சுருளிவேல் மன்னிப்புக் கோர வேண்டுமென்று கோரி மாணவர்கள் ஆர்ப்பாட்டம் செய்ததும், அந்த மாணவர்கள் மீது போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தியதும், அதன் விளைவாக பள்ளிகள் அனைத்தும் காலவரையற்று மூடப்பட்டதும் தெரிந்ததே.

மீண்டும் பள்ளிகள் நேற்றைய முன் தினம் (திங்கள்) திறக்கப்பட்டன. ஆனால் மாணவர்கள் யாரும் பள்ளிக்குச் செல்லாமல் ஊர்வலங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடத்தினர், அந்த ஆர்ப்பாட்டத்தின் மீது போலீசார் கண்மூடித்தனமாகச் சுட்டனர்.

## பாளையங்கோட்டை அஞ்சல் ஊழியர் ஆர்ப்பாட்டம்

பாளையங்கோட்டை, நவ. 22—

போலீஸ் தாக்குதலைக் கண்டித்து பாளையங்கோட்டை தலைமை அஞ்சல் அலுவலகம் முன் அஞ்சல் ஊழியர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

பாளையங்கோட்டை போஸ்டல் சூப்பிரண்ட் ஆபீசில் அக்கவுண்டண்டாக வேலை பார்த்து வருபவரும், போலீசாரால் தாக்கப்பட்ட பேராசிரியர் சீனிவாசன் சகோதரருமான ஆராவமுதமும் போலீசால் தாக்கப்பட்டதைக் கண்டித்து இந்த ஆர்ப்பாட்டம் நடந்தது.

ஊழியர்கள் அனைவரும் கறுப்பு பேட்ஜ் அணிந்து வேலைக்குச் சென்றனர்.

# தி. மு. க. வில் பிளவு

# மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தமிழ் மாநிலக் குழு தீர்மானம்




கோவை, நவ. 22—

**கோவை [வடக்கு] உடையாம்பாளையத்தில் நவ. 19, 20, 21, 22-ம் நாட்களில் கூடிய இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] தமிழ் மாநிலக் குழு தமிழ்நாட்டின் இன்றைய அரசியல் நிலைமைகள் குறித்துப் பரிசீலனை செய்து நிறைவேற்றிய தீர்மானம் வருமாறு:-**

தமிழக சட்டமன்றத்தில் மொத்தம் உள்ள 234 இடங்களில் 183ல் தி. மு. க. 1971 தேர்தலில் பெரும் வெற்றி பெற்றது. தன்னை யாரும் அசைக்கவே முடியாது என்று மதுரை மாநாட்டின்போது நடைபெற்ற பிரமாண்டமான அணிவகுப்பினைச் சுட்டிக்காட்டி தற்பெருமை கொண்ட திராவிட முன்னேற்றக் கழகம் மூன்று மாதத்திற்குள் ஆழமானதொரு பிளவுக்கு உள்ளாகி நிற்பதைக் காண்கிறோம். ஒரு பிரளயமே நிகழ்ந்து போன்ற நிகழ்ச்சி நிகழ்ந்துள்ளது.

திரு. எம். ஜி. ராமச்சந்திரன் அவர்களால் உயர்த்தப்பட்ட கலகக் கொடியின் வழி தோன்றிய அண்ணா திராவிட முன்னேற்றக்கழகத்தில், தி. மு. க. வின் பெரும்பாலான அணிகளும் ஆதரவாளர்களும் திரண்டு வருகிறார்கள். தி.மு. கழகத்தின ஒற்றுமையின் போலித்தனம இந்நிகழ்ச்சியின்மூலம் அம்பலமாகிறது. இபபடிப்பட்டதொரு நிகழ்ச்சி தற்செயலாக நிகழ்ந்த ஒன்றல்ல.

## பிளவு ஏன் ?

கவர்ச்சிகரமான உணர்ச்சிமிக்க கோஷங்களின் அடிப்படையில் திராவிட முன்னேற்றக் கழகம் உருவாயிற்று. இந்திய நாட்டின் உண்மை நிலைகளின் நிர்பந்தத்தின் விளைவாக அந்தக் கோஷங்களை தி.மு.கழகம் கைவிட நேர்ந்தது. அதற்குப்பின் ஒரு தத்துவமோ கொள்கை திட்டமோ அதற்கு இல்லாமல் போயிற்று

சமுதாயத்தில் ஒடுக்கப்பட்ட மக்களின் துன்ப துயரங்களை சக்திவாய்ந்த முறையில் சித்தரித்து அவைகளிலிருந்து. மக்களை விடுதலை செய்ய தான் பாடுபடப் போவதாக தி. மு கழகம் உறுதி கூறியது. திறமை வாய்ந்த அப்பிரச்சாரம் மக்களிடையே ஆழமான நமபிக்கைகளை உருவாக்கின.

ஆனால் 1967-ல் பதவியில் அமர்ந்த ஓர் ஆண்டுக்குள்ளாகவே, திராவிட முன்னேற்றக்கழக அரசு தொழிலாளர்கள் விவசாயிகளின் உரிமைப் போராட்டங்களை ஒடுக்கிட போலீஸ் அடக்குமுறையை கட்டவிழ்த்து விட்டது. அதனுடைய கொள்கைகள் மேலும் மேலும் அதிகமாக முதலாளிகள், நிலச்சுவான்தார்களின் நலன்களை பாதுகாப்பதாகவே இருந்தன.

வளர்ந்துவரும் பொருளாதார நெருக்கடியின் காரணமாக மேலும் மேலும் அதிகமான போராட்டங்கள் வெடித்தபோது, தமிழகத்தில் போலீஸ் வெறியாட்டமும் அதிகரித்தது. இத்தகைய அடக்குமுறைகளுடன் தொழிலாளிவர்க்கத்தின ஒற்றுமையைச் சீர்குலைக்கும முயற்சியிலும் தி. மு. க. ஈடுபட்டது. அரசாங்க இயந்திரத்தை பயன்படுத்தி எதிர்க் கட்சியினரை துன்புறுத்தினர். போலீசாருக்கு கங்கு கரையற்ற சுதந்திரம் வழங்கப்பட்டது. நிரபராதிகளான ஆண்களையும் பெண்களையும போலீஸ் லாக்கப்களில் வைத்து சித்திரவதை செய்தனா. அங்குகொலை வெறித் தாக்குதலுக்கு பலர் ஆளாயினர். தங்கு தடையின்றி இத் தாக்குதல் தொடர்ந்தன.

எதிர்க் கட்சிகளைச் சார்ந்தவர்கள் மீது தி. மு. க உறுப்பினர்கள் பலாத்காரத் தாக்குதல்களில் இறங்கிய போது அவர்கள் (தி. மு. க.வினர்) மீது போலீசார்நடவடிக்கை எதுவும்எடுக்கமாட்டார்கள்எனறஒரு நிலை உருவாக்கப் பெறறது.

எல்லா மட்டங்களிலும் தி. மு. க.வினருக்குசலுகைகள் கிடைக்கும் வகையில அரசாங்க இயந்திரம் பயன்படுத்தப்பட்டது. பல்வேறு மட்டங்களில் உள்ள அரசாங்க அதிகாரிகளுக்கு தி. மு. க. உறுப்பினர்கள் உண்மையிலேயே உததிரவுகள் போட ஆரம்பித்துவிட்டனர்.

இதன் விளைவாக, லஞ்ச ஊழல்கள் விரிவடைந்தன இத்தகைய செயல் முறைகள் மூலம் தி. மு. க. தலைவர்கள் தங்களுடைய கட்சியைப் பலப்படுத்துவதாக நினைத்தார்கள்.

1971-ல் இந்திராகாந்தி நாடாளுமன்றத்தைக் கலைத்தபோது தி. மு. க. அரசு சட்ட சபையையும் கலைததுவிட்டு, நாடாளுமனறம், சட்டமன்றம் ஆகிய இரண்டுக்கும ஒரேசமயத்தில் தேர்தல்நடத்தியது. அந்தத் தேர்தலில் இந்திரா காங்கிரசுடன் தேர்தல் கூட்டு சேர்ந்து இந்திரா காந்தியின் இடதுசாரி சாகசத்தையும் தி. மு. க. தனக்கு அனுகூலமாகப் பயன்படுத்திக்கொண்டது. இதன விளைவாகத்தான் தேர்தலில் தி. மு. க. பிரமாதமான வெற்றி பெறமுடிந்தது. இந்த வெற்றி தங்களுடைய அரசாங்கம் பின்பற்றி வந்த கொள்கைகளுக்குக் கிடைத்த வெற்றி என்றே தி. மு. கத் தலைவர்கள் நினைத்தனர். இந்த வெற்றியின் போதை தலைக்கேறி, 1971 தேர்தலுக்குப்பிறகு முன்பு பின்பற்றிவந்த தங்களுடைய மக்கள்விரோதக்கொள்கைகளை இன்னும் தீவிரமாகவே அமுல் நடத்தினர். போலீஸ் அடக்குமுறைகளை அதிகரித்தே, போராடும் தொழிலாளர்கள் விவசாயிகளின் மீது ஆளும் கட்சியின் குண்டர்களின்தாக்குதல் தீவிரமாயின. லஞ்ச ஊழல்களும் பெருகின.

தி. மு க. அரசின், இந்நகைய தாக்குதல்களின் பெரும்பகுதி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் மீதும், அதைப் பின்பற்றும் மக்கள் மீதும் விழுந்தது. இந்தியப் பாதுகாப்புச் சட்டமும பயன்படுத்தப்பட்டது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவர்கள் விசாரணையின்றிச் சிறையில் அடைக்கப்பட்டார்கள்.

## மார்க்சிஸ்ட் கட்சி மீது அடக்குமுறை

இத்தகைய அடக்கு முறைத்தாக்குதலுக்கு மத்தியிலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அணிகளும் அதன் செல்வாக்கின கீழ் உள்ள மக்களும் தங்களுடைய உரிமைப் போராட்டங்களைத் தொடர்ந்து நடததியது குறித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்மாநிலக் குழு பெருமை கொள்கிறது.

போலீஸ் அடக்குமுறை, குண்டர்களின் தாக்குதல், "மார்க்சிஸட் கட்சி என்ற போர்வையில் உள்ள நக்சல்பாரிகளின் கட்சி" என்ற அவதூறுப் பிரச்சாரம் ஆகியவற்றை எதிர்த்து நின்று உறுதியுடன் மார்க்சீஸ்ட் கட்சியின் அணிகளும் மக்களும் போராடியது குறித்தும், அவ்வாறு போராடிப் பல முறை தி. மு. க, அரசின தாக்குதலை முறியடித்தது குறித்தும் தமிழ் மாநிலக்குழு பெருமைப்படுகிறது.

இத்தகைய கொள்கைகள் நீண்ட நாளைக்கு பலன் தரமாட்டா என்று தி. மு. க. தலைவர்களை நமது கட்சி திரும்பத் திரும்ப எச்சரிக்கை செய்தது. ஆனால் இந்த எச்சரிக்கைகள் அனைத்தும் புறக்கணிக்கப்பட்டன.

தி. மு. க. ஆட்சியின் இக் கொள்கைகளின் விளைவாகவும், லஞ்ச ஊழல்கள் அதிகரித்ததின் விளைவாகவும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்குள்ளேயே கோஷ்டிச் சண்டைகள் தீவிரமாயின. இததகையதொரு சூழ்நிலையில்தான் லஞ்ச ஊழல் பிரச்சனையின்பேரில் திரு. எம்.ஜி.ராமச்சந்திரன் அவாகள் கலகக் கொடியை உயர்த்தினர். இதற்கு தி மு. க. அணிகளிடையேயும், அதன் ஆதரவாளர்களிடையேயும், மக்களிடையேயும் ஒரு அனுதாபமான பிரதிபலிப்பு ஏற்பட்டது.

## பிளவுக்குப்பின் தாக்குதல்

இந்தக் கலகத்தின் தன்மையை உணர்ந்து கொள்ளாமல், இதை அடக்கி ஒடுக்க அரசாங்க இயந்திரத்தை தி. மு. க. தலைவாகள பயன்படுத்த முன்வந்துள்ளனர். பல்லாயிரக்கணக்கான ஊழியர்கள் மீது வழக்குகள் தொடுக்கப்பட்டுள்ளன. பல இடங்களில் பொதுக் கூட்டங்களுக்கு 144 தடையுததிரவு பிரகடனப் படுத்தப்பட்டுளளன. துப்பாக்கிப் பிரயோகங்கள் பல நடைபெற்றுள்ளன. மத்திய ரிசர்வ் போலீசும் வரவழைக்கப்பட்டுளளது. இத்தகைய அடக்குமுறைகளை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்மாநிலக்குழு வன்மையாகக் கண்டனம் செய்கிறது.

இன்றைய நிலைமையை இத்தகைய உபாயங்களின் மூலம் சமாளிக்க முடியாது என தி மு க. அரசை தமிழ் மாநிலக் குழு எச்சரிக்கிறது. எல்லாத் தடை உத்திரவுகளையும் திரும்பப்பெறும்படி வற்புறுத்துவதுடன் துப்பாக்கிப் பிரயோகங்கள் அனைத்தையும் பற்றி பகிரங்க நீதி விசாரணை நடதத வேண்டும் என்று கோருகிறது. மத்திய ரிசர்வ் போலீஸ் படை திருப்பி அனுப்பப்பட வேண்டும் எனவும் கோருகிறது,

## நீதி விசாரணை வேண்டும்

இந்திய ஜனாதிபதியிடம் சமர்ப்பிக்கப்பட்ட லஞ்ச ஊழல் குற்றச் சாட்டு மகஜர்கள் பிரதம மந்திரி மூலம் இப்பொழுது முதலமைச்சருக்கு வந்து உள்ளன. இந்த லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுகளின் தன்மை குறித்து முடிவு கூறும் பொறுப்பினை இந்திய அரசின் பிரதம மந்திரிக்கு விட்டுவிடக்கூடாது என்று மார்க்சிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு கருதுகிறது. தலைமை நீதி மன்ற (சுப்ரீம் கோர்ட்) நீதிபதி ஒருவரிடம் இந்த ஊழல் குற்றச் சாட்டுகளை சமர்ப்பிக்க வேண்டுமென தமிழக முதலமைச்சர் வற்புறுத்துகிறது. அவரது விசாரணையில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட அமைச்சர்கள்மீது முழுமையான வழக்கு தொடுப்பதற்கு ஆரம்ப ஆதாரம் (பிரைமாபேசி கேஸ்) இருக்கிறது என்று அந்த நீதிபதி கூறுவாரானால், சம்பந்தப்பட்ட அமைச்சரோ அல்லது அமைச்சர்களோ பதவியில் இருந்து விலகி முழு விசாரணையினைச் சந்திக்கும்படி கோரப்பட வேண்டும்.

நிலச் சுவான்தார்களுக்கும், முதலாளிகளுக்கும் ஆதரவாக தமிழக அரசின் கொள்கைகள் தொடர்ந்து நீடிக்குமேயானால், அதன் ஜனநாயக விரோத போலீஸ் கொள்கைகளும் ஜனநாயக விரோத நடைமுறைகளும் இத்தகைய நிகழ்ச்சிகளுக்குப் பிறகும் தொடர்ந்து பின் பற்றப்படுமேயானால். தி. மு. க. அரசு நீடித்து இருப்பதற்கான உரிமையை இழந்துவிடும்.

## படிப்பினைகள் என்ன?

தி.மு.க.வில் ஏற்பட்டுள்ள இந்த வளர்ச்சிபோக்கினைப் பற்றி அ. தி. மு. க. தலைவர்களும், அணிகளும் தக்க படிப்பினைகளை பெற முன் வரவேண்டும் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கூறிக்கொள்ள விரும்புகிறது. தி. மு. கழகம் பின்பற்றிய தவறான கொள்கைகளின் விளைவுகளே லஞ்ச ஊழல்கள் என்பதை உணர்ந்திட வேண்டும். லஞ்ச ஊழல்களை எதிர்க்கின்ற அதே சமயததில், மேலே குறிப்பிட்ட அதன் தவறான கொள்கைகளையும் எதிர்த்துப் போராடாவிட்டால், லஞ்ச ஊழல்களுக்கு எதிரான போராட்டம் பயனுள்ளதாக இருக்காது.

1971 தேர்தலுக்குப் பிறகு பொருளாதார நெருக்கடி மேலும் தீவிரமாகிவருகிறது. வெகுவேகமாக உயர்ந்திடும் விலைவாசிகள், வேலையில்லாத் திண்டாட்டம், தொழில் வளர்ச்சியில் ஏற்பட்டுள்ள தேக்கம் ஆகியவை தமிழ் மக்களையும், இந்திய நாடு முழுவதையும் பாதித்துள்ளன. இதற்கு நேர் மாறாக, ஏகபோக முதலாளிகள்தங்களுடைய செல்வத்தையும் லாபத்தையும் தொடர்ந்து பெருக்கிக் கொண்டே போகிறார்கள்.

இந்திரா காங்கிரஸ் அரசாங்கத்தின் அடிப்படையான கொள்கைகளின் நேரடிவிளைவுகள் இவை. இதன் காரணமாக இந்திரா காங்கிரசின் பசப்புவார்த்தைகளின் மீது உருவான மக்களது பிரமைகள் இன்று தகர்ந்து தரைமட்டமாகி வருகின்றன. தொழிலாளிகள், விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள், மாணவர்கள், ஆசிரியர்கள், மருத்துவத் துறையினர், அரசு ஊழியர்கள் ஆகிய பல்வேறு உழைக்கும் மக்களின் போராட்டங்கள் ஒவ்வொரு மாநிலத்திலும் வெடித்துள்ளன. இதற்குமுன்பு கண்டிராதவகையில்இந்த போராட்டங்களைதடியடித்தாக்குதல்கள் மூலமும் துப்பாக்கிச் சூடுகள் மூலமும் இன்னும் பலவகையான வெறியாட்டங்கள் மூலமும் அடக்கி ஒடுக்கிட மத்தியிலும், மாநிலங்களிலும் உள்ள இந்திரா காங்கிரஸ் அரசுகள் முயற்சி செய்கின்றன. எனினும் மேற்கூறிய உரிமைப்போராட்டங்கள்பின்வாங்கவில்லை; நாள்தோறும் வளர்ந்து தீவிரமாகி வருகின்றன.

இந்திரா காங்கிரசின் இந்த உண்மையான சொரூபத்தை அ. தி. மு. க. தலைவர்களும், அணிகளும் பார்க்க வேண்டும். மேற்கு வங்கத்தில் அரை பாசிஸ்ட் வெறித்தனத்தை இந்திரா காங்கிரஸ்தான் கட்டவிழ்த்து விட்டுள்ளது என்பதையும் காண வேண்டும். நாடு முழுவதும் பொது மக்களை தாக்கும் தன்னுடைய கொள்கைகளை இந்திரா காங்கிரஸ் தீவிரப்படுத்தி ஏகபோக முதலாளிகளும், கள்ளமார்க்கெட் சூதாடிகளும், லாபவேட்டைக்காரர்களும் கொழுத்துப் பெருத்திட உதவி செய்கிறது என்பதையும் அவர்கள் காண வேண்டும். கள்ளப் பணம் உருவாகி அது அதிகரித்துக் கொண்டே போவதற்கு காரணமாக உள்ள இந்திரா காங்கிரசுடன் எந்த காரணத்தை முன்னிட்டும் கைகோர்த்துக் நிற்பது முற்றிலும் பயனற்றதாகவே இருக்கும்.

ஸ்தாபனக்காங்கிரசைப் பொறுத்தவரையில், அது பதவியில் இருந்த சென்ற 20 ஆண்டு காலத்திய ரிக்கார்டு நம் தேசத்தின் முன்னால் உள்ளது. அதன் பிற்போக்குக் கொள்கைகள் யாவரும் அறிந்தவையே. தி. மு. க. வில் ஏற்பட்டுள்ள இந்த பிளவை தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள அது முயற்சி செய்கிறது.

## அ. தி. மு. க.வுக்கு வேண்டுகோள்

அதனால்தான், இந்திரா காங்கிரசுடனே, ஸ்தாபன காங்கிரசுடனே, அல்லது சுதந்திரா கட்சியுடனே அ. தி. மு. க. எத்தகைய உறவும் கொள்ளக்கூடாது என மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழு விரும்புகிறது, ஏகபோக முதலாளிகளையும், நிலச் சுவான்தார்களையும், எதிர்த்து உறுதியுடன் போராட வழிகாட்டும் ஒரு திட்டத்தை அ. தி. மு. க. உருவாக்க வேண்டும் என விரும்புகிறது. ஏனைய இடதுசாரி ஜனநாயக கட்சிகள், வெகுஜன ஸ்தாபனங்களுடன் சேர்ந்து நின்று சுரண்டப்பட்ட மக்களின் போராட்டங்களைப் பலப்படுத்தும்படி அ. தி. மு. க. வை மார்க்சிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு வற்புறுத்துகிறது.

இந்திரா காங்கிரஸ், ஸ்தாபன காங்கிரஸ், சுதந்திரா கட்சி ஆகியவைகளுடன் அ. தி. மு. க. எத்தகைய உறவும் கொள்ளவில்லையானால், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழு அ. தி. மு. க.வுடனும் ஏனைய இடதுசாரி ஜனநாயக கட்சிகளுடனும் கீழ்வரும் கோரிக்கைகளுக்காக இணைந்து நின்று போராடத் தயாராக உள்ளது.

1) தொழிலாளி வர்க்கத்துக்கும், விவசாயிகளுக்கும் எதிராகவும், ஜனநாயகப் போராட்டங்களுக்கும் எதிராகவும் எதிர்க்கட்சிகளை நசுக்குவதற்கும் போலீசைப் பயன்படுத்தும் கொள்கைக்கு எதிராகவும்,

2) விஷம் போல் உயர்ந்து வரும் விலைவாசி உயர்வை எதிர்த்தும்,

3) வேலையில்லாத் திண்டாட்டத்துக்கு எதிராகவும்,

4) தமிழ்நாடு முழுவதும் விவசாயத் தொழிலாளர்களுக்கு நாள்ஒன்றுககு குறைநதபடசக கூலி ரூ 5 கிடைக்குமபடி செய்யவும்,

அ. தி. மு. க. வுடனும் ஏனைய இடதுசாரி, ஜனநாயக கட்சிகளுடனும் இணைந்து போராடத்தயாராக உள்ளது.

## வலது கம்யூனிஸ்ட் நிலை என்ன?

வலது கம்யூனிஸ்ட்கட்சியின் நடைமுறை காங்கிரஸ் கட்சியின் நலன்களுக்காக சேவை புரிவதேயாகும் என்று தமிழ் மாநிலக் குழு எச்சரிக்கிறது. இந்த உண்மை 1967 தேர்தலிலும், மேற்கு வங்க கேரள அரசுகளைக் கவிழ்த்ததிலும், அங்கெல்லாம மீண்டும காங்கிரஸ் ஆட்சியைக் கொண்டு வந்ததிலும் நன்கு தெளிவாயிற்று.

1970-ல் வறட்சி நிவாரணத்துக்காக மத்திய அரசால் கொடுக்கப்பட்ட நிதியை உபயோகிப்பதில் தி.மு.க. அரசாங்கம் ஊழல் புரிந்துவிட்டதாக இன்று அது பேசுவது பித்தலாட்டமாகும். இந்தக் குற்றச்சாட்டை இன்று கூறி முன் வந்துள்ள வலது கம்யூனிஸ்டே தி. மு. க.வுடன் 1970-ம் ஆண்டு நகரசபைத் தேர்தலிலும் 1971-ம் ஆண்டு நாடாளுமன்ற, சட்டமன்ற தேர்தல்களிலும் காங்கிரசை இணைத்து கூட்டணி அமைத்து காங்கிரசிறகுச் சேவை புரிந்துள்ளது. இன்று மீண்டும புதிய முன்னணி ஒன்றை இங்கு அமைப்பதின் மூலம தமிழகத்தில் இந்திரா காங்கிரசின் ஆட்சியை கொண்டுவர முயற்சி செய்கிறது.

## தொழிலாளர்களுக்கு வேண்டுகோள்

லஞ்ச ஊழலை எதிர்த்துப்போராடும அதேசமயததில் மக்கள் மீது சுமத்தப்படும் புதிய சுமைகளுக்கும். தாக்குதல்களுக்கும் எதிராக தங்களது ஒன்றுபட்ட போராட்டங்களைத் தீவிரப்படுத்துவதே இன்றைய தேவை என்பதை உணரவேண்டுமென தொழிலாளி வர்க்கத்தையும், சுரண்டப்படும் சகல பகுதி மக்களையும் தமிழ் மாநிலக்குழு எச்சரிக்கை செய்கிறது. தங்களணிகளில் ஒற்றுமை உருவாக்கி ஒன்றுபட்ட போராட்டங்களை நடத்தும் முயற்சிகளைத் தளர்த்தினால் நாசகரமான விளைவுகள்தாம ஏற்படும்.

## பொதுமக்களுக்கு வேண்டுகோள்

சுதந்திரம் பெற்ற நாளிலிருந்து கடந்த 25 ஆண்டுகளாக தமிழக மக்கள் கசப்பான அனுபவங்களையே சந்தித்துள்ளனர். வருமானத்திலும் செல்வத்திலும் ஏற்றத்தாழ்வைக் குறைக்கப் போவதாகவும், விவசாயிகளுக்கு நிலம் வழங்கப் போவதாகவும், வறுமையையும் வேலையில்லலாத் திண்டாட்டத்தையும் ஒழித்திடப் போவதாகவும் நம்பிக்கைகளை உருவாக்கி பல அரசியல் கட்சிகள் சோஷலிச கோஷத்தையும் எழுப்பின. அதிகாரத்துக்கு வந்ததும் அக்கட்சிகளின் நடைமுறை அவற்றின் பேச்சுகளுக்கு நேர்மாறாக இருந்தன, நம்முடைய பொருளாதாரத்திலும அரசியல் வாழ்விலும் ஏகபோக முதலாளிகள், நிலப் பிரபுக்கள், வர்த்தக

(4 - ஆம் பக்கம் பார்க்க)

# தீக்கதிர்

## சர்க்கரை விலை ஏற்றம்

சர்க்கரை விலையை இந்திய அரசாங்கம் கிலோவுக்கு 20 காசுகள் கூட்டியுள்ளது. சர்க்கரைத் தொழிலைப் பற்றி ஆராயும் காப்புவரிக் கமிஷன் அறிக்கை வெளியாகும்போது டிசம்பரில் சர்க்கரை விலை மேலும் உயரும். இந்த சர்க்கரை விலை ஏற்றத்தால் பயனடைபவர் யார்?

சென்ற ஆண்டில் மட்டும் லெவி சர்க்கரையின் விலை குவிண்டாலுக்கு ரூ 17.34 லிருந்து ரூ. 38.18 வரை உயர்ந்தது. வெளிமார்க்கெட்டில் சர்க்கரை விலை குவிண்டாலுக்கு ரூ. 153-லிருந்து ரூ. 353 வரை உயர்ந்தது. சில இடங்களில் குவிண்டால் ரூ. 385 வரைகூட உயர்ந்தது. அதாவது 30-லிருந்து 50 சத விகிதம் வரை உயர்ந்தது.

இந்த விலை உயர்வு மக்கள் தலை மீதே சுமத்தப்பட்டது. நியாய விலைக்கடைகளில் சர்க்கரை கிடைக்காதது மட்டுமின்றி அளவும் குறைக்கப்பட்டது. இதனால் இதே கடைகளிலிருந்து சப்ளை கள்ளமார்க்கெட்டுக்குத் திரும்பப்படும் நிலைமையும் ஏற்பட்டது.

லெவி சர்க்கரை விலையும், வெளிமார்க்கெட் சர்க்கரை விலையும் எவ்வளவு உயர்ந்தது என்று துல்லியமாகக் கணக்கிடப்படவில்லை. ஆனால் கிலோவுக்கு 30 காசுகள் வரை மக்கள் நிச்சயமாகக் கொடுக்கவேண்டியிருக்கும். அண்மையில்தான் லெவி சர்க்கரை விலை கிலோ ரூ 2 என்று நிர்ணயிக்கப்பட்டது. அதற்கு மேலாக இந்த விலை ஏற்றத்தை மக்கள் ஏற்கவேண்டியுள்ளது.

வெளி மார்க்கெட்டில், சர்க்கரை கிலோவுக்கு ரூ. 4 விலைக்கு விற்பது மேலும் உயரும். தீபாவளி பண்டிகையின்போது தொழிலாளர்களுக்குக் கிடைத்த போனஸ் தொகை ஏற்கனவே ஏற்பட்டுள்ள விலை ஏற்றத்தில் கரைந்து விட்டது என்று பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. சர்க்கரை விலை ஏற்றம் ஊதியத்தை மேலும் கரைக்கும்.

மக்களிடமிருந்து அடிக்கப்படும் இந்தக் கொள்ளை யாருக்குப் போகிறது?

இந்த விலை ஏற்றத்தால் கரும்பு உற்பத்தியாளருக்குப் பலன் கிட்டவில்லை.

சர்க்கரை விலை ராக்கட் வேகத்தில் ஏறும்போது கரும்பு உற்பத்தியாளருக்கு சர்க்கரை ஆலை முதலாளிகள் கொடுக்கும் விலையும் அரசாங்கம் நிர்ணயித்துள்ள விலை அதிகரிப்பும் அற்பமாகவே உயர்ந்துள்ளது. குவிண்டாலுக்கு 63 காசுகளே உயர்ந்துள்ளது.

மேலும் முன்னர் நிர்ணயிக்கப்பட்டிருந்த குவிண்டாலுக்கு ரூ. 7.37 விலைக்கு கரும்பு சப்ளை செய்ததற்கான பாக்கியைக்கூட சர்க்கரை ஆலை முதலாளிகள் கரும்பு உற்பத்தியாளர்களுக்குக் கொடுக்காமலிருக்கிறார்கள். எனினும் அரசு எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

சென்ற ஆண்டில் சர்க்கரை மொத்த விலை 30 லிருந்து 50 சதவிகிதம வரை உயர்ந்ததில் சர்க்கரை ஆலை முதலாளிகள் ரூ. 200 கோடி வரை லாபமடித்திருப்பதாகக் கூறப்படுகிறது. எக்சைஸ் வரிச் சலுகை உள்ளிட்ட பல சலுகைகள் அளித்து அரசு இந்தக் கொள்ளைக்கு உதவியுள்ளது.

ஒவ்வொரு கட்டத்திலும் சர்க்கரை ஆலை முதலாளிகளின் கொள்ளையை அரசு உறுதிப்படுத்தியுள்ளது.

கரும்பு விலை சிறிது உயர்த்தப்பட்டதும் இதற்கு நட்ட ஈடாக 30 சதவிகித சர்க்கரையை சர்க்கரை ஆலை முதலாளிகள் வெளி மார்க்கட்டுக்குத் திருப்புவதற்கு அனுமதிக்கப்பட்டது. உடனே சர்க்கரைத் தட்டுப்பாடு ஏற்பட்டு விலை ஏறிற்று. உற்பத்தியைக் குறைத்துக் காட்டி அரசாங்கத்துக்கு வரவேண்டிய 66.5 சதவிகித லெவி சர்க்கரை அளவில் தில்லுமுல்லு செய்யப்பட்டது. அதனால் 40 சதவிகித லெவி சர்க்கரையே கிடைத்தது. மீதி கள்ளமார்க்கெட்டுக்குத்தான் போயிற்று

மீண்டும் சர்க்கரை விலையை கிலோவுக்கு 20 காசுகள் வீதம் கூட்டுவதற்குக் கூறப்படும் காரணம் கரும்பு விலை உயர்விற்கு ஈடுகட்டவே என்று கூறப்படுகிறது. ஏற்கனவே ஒருமுறை இதற்காக சர்க்கரை விலை உயர்த்தப்பட்டிருக்கும்போது இரண்டாவது முறையாகவும் உயர்த்தப்படுகிறது. ஏன்?

இது போலவே தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்பட்ட போனசுக்காக இந்தவிலை ஏற்றம் என்று கூறப்படுதும் பித்தலாட்டமேயாகும்.

---

## எஸ். எஸ். எல். சி. தேர்வுக்குப் பணம் கட்டும் தேதி

### நவ. 30-வரை நீடிக்கக் கோரிக்கை

மதுரை, நவ. 20—

மதுரைப் பல்கலைக் கழக செனட் மற்றும் அகாடமிக் கவுன்சில் உறுப்பினரும, மதுரை நகர மக்கள் கல்விக் கழகச் செயலாளருமான பேராசிரியர் சங்கர நாராயணன பத்திரிகைகளுக்கு விடுததுள்ள அறிக்கை:—

பள்ளிக்கூடங்களில் பயிலும் மாணவர்கள் எஸ். எஸ். எல். சி. மார்ச். 73 தேர்வுக்கான பணம் செலுத்தும் தேதியை நவம்பர் 30-ம் தேதிவரை நீடித்து அரசாங்கத் தேர்வு ஆணையாளர் உத்தரவிட்டிருப்பதையறிகிறேன். தனியாகப்படித்துத் தேர்வு எழுதும் மாணவர்களில் பலர் ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்ட நவமபர் 15-ம் தேதியன்று தமிழகத்தில் நடந்த ஹர்த்தாலின் காரணமாக தங்களது தேர்தல் பணத்தைச் செலுத்தவில்லை. எனவே தனியாகப் படித்து எஸ். எஸ். எல். சி. மார்ச் 73 தேர்வு எழுதும் மாணவர்களுக்கும் தேர்வுப் பணம் செலுத்தும் தேதியை நவம்பர் 30 வரை நீடிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

---

## கென்னடியை கொலைசெய்ய நடந்த சதிகள்

கறுப்புக் கண்ணாடி அவனது கண்களை மறைத்துக்கொள்ள! டோப்பா முடியும் போலி மீசையும், தனது உண்மையான முகத்தை - உருவத்தை மறைத்துக்கொள்ள. இந்த நபர் தனது பெயரை ஜோஸ் லூயிஸ் ரோமேரோ என்கிறார். அவர் சொல்கிறார் :

### கென்னடியை கொலை செய்ய

"எனக்கு அமெரிக்கர்கள் 10 கோடி பிராங்குகள் கொடுத்தனர். எதற்காக தெரியுமா? அமெரிக்காவின் ஜனதிபதியாகஇருந்த கென்னடியை கொலைசெய்வதற்காக!" என்று.

ரோமேரோ மேலும்கூறுவதாவது :—

ஜான் எப். கென்னடியை லீ ஹார்மாஆஸ்வால்டு சுட்டுக் கொல்லுவதற்கு சுமார் இரண்டறை ஆண்டுக்கு முன்பே, கென்னடியைத் தீர்த்துக் கட்டும்படி என்னிடம அமெரிக்கர் சொன்னார்கள்.

### பிரெஞ்சு நாட்டில் கொலை முயற்சி

கென்னடி பிரான்சுக்கு அரசாங்க விருந்தினராக வந்திருந்தபோது, 1961-ஆம் ஆண்டு மே மாதம் 31-ம் நாள் அவரைச் சுட்டுக் கொல்ல முயன்றேன். இந்த கொலை முயற்சி எபபடி இருக்கவேண்டும் தெரியுமா? பிரெஞ்சு அதிபர் டிகாலைக் கொலை செய்ய நடந்த முயற்சி போன்று தெரியவேண்டும் ஆனால் கென்னடி சுட்டுக் கொலலப்படவேண்டும்.

இதைச் செய்து முடிப்பதற்காக எனக்கு 20 கோடி பழைய பிராங்குகள் தருவதாக வாககுறுதி அளிக்கப்பட்டது. அதில பாதி-அதாவது 10 கோடி பிராங்குகள் முன்பணமாக(அட்வான்ஸ்) வும் தரப்பட்டது.

மேலே கண்டவாறு, 'லீ ஆரோர்' என்ற, பிரெஞ்சுப் பத்திரிகையின் நிருபரான காமில்லி இல்ஸ் என்பவரிடம் ரோமேரோ கூறியுள்ளார்.

என்ன இதெல்லாம்? பைத்தியக்காரனின பிதற்றலா? அல்லது கேலிக்கூத்தா? பத்திரிகைப் புரளியா? சரியான சற்பனையா? என்று எல்லோரும் கருதலாம்.

ஆம்! பதிலளிக்க முடியாத சிக்கலான கேள்விதான் இது! ஆனால், முதலாளித்துவ உலகில், இது போன்ற நிகழ்ச்சிகள் அசாதாரணமானது அல்ல. அடிக்கடி நிகழக்கூடியது தான.

### ரோமேரோ பற்றி

மாட்ரிட்டைச் செய்தியாளர் லீ ஆரோரே எழுதுகிறார்.

ரேகமேரோ தனது 20வது வயதில் அந்நியப்படைப்பிரிவில் சேர்ந்து இந்தோ-சீனவில் நடந்த யுத்தத்தில் பிரெஞ்சு இராணுவவீரனகப் பணியாற்றினன. அலஜீரியாவில் லெபடினென்ட் பதவிக்கு உயர்ந்தான். துப்பாக்கிச்சுடும் பயிற்சியிலும் மல்யுத்தத்திலும்மிகவும்தேர்ச்சி பெற்றான்,

அல்ஜீரியாவில் இருந்த இரகசிய இராணுவ அமைப்பின் 'கொலேப்பிரி' வில் இருந்த இவனுக்கு மைக் என்ற ஓர்அமெரிக்கனுடன் தொடர்பு ஏற்பட்டது. அவ்வப்போது பண உதவியும், ஆயுத உதவியும் ரகசிய இராணுவ அமைப்புப் படையினருக்குஅளித்து வந்தான்.

1961 மே மாதத்தில் ஒரு நாள் மாலைப் பொழுது. மைக்ரோபெரோவுக்கு ஒரு போலி பாஸ்போர்ட் தருவதாகக் கூறி, வழக்கம்போல அவர்கள் சந்திக்கும் விடுதியில் சந்திப்பது என்று முடிவு செய்திருந்தனர். ஆனால் அன்று மாலை மைக் வரவில்லை. மாறுக. கறுப்பு தொப்பிகள் அணிந்த வேறு இருவர் வந்து சந்தித்தனர். தாம் மைக்கிடமிருந்து வருவதாகக் கூறினர். அவனிடம ஒரு பேப்பரைக்கொடுத்தனா. பின்னர் வெளியே வரும்படி அளித்தனர். அவன் தனது புதிய நண்பர்களைச் சந்தேகிக்கவில்லை. அனைவரும் காரில் புறப்பட்டனர். நகரைவிட்டுக் கிளம்பி சிறிதுநேரம் சென்றதும் ஒரு காட்டில் வண்டி நின்றது.

இங்குதான் அந்தஒப்பந்தம் —ஜனதிபதி கெனனடியைக் கொலை செய்யச் சதி நடந்தது. பணம் கைமாறியது.

### பாரிஸ் நகரில்

பின்னர் ரோமேரோவை பௌ—ஹாரேளன் துறை முகத்துககு அழைததுச் சென்று, அங்கு அவனிடம், ஜெனிவா காண்டன்-ல் 1961 ஏப். 20-ல் புரோமுஜர் என்ற பெயரில் வழங்கபாட்டிருந்த பாஸ் போர்ட்டைக் கொடுத்தனர். பின்னர், அந்த புதிய ஸ்விட்சர்லாந்துவாசி' ஒரு பிரெஞ்சு மீன படகில் ஏற்றப்பட்டு மெஜோர்கா தீவுக்கு ஓட்டிச் செல்லப்பட்டான். அங்கு ஒரு தனிமாளிகையில் மைக் இவனுக்காக காத்திருந்தான. அங்கு ரோமேரோவுக்கு வேறு உடைகள் அணிவிக்கப்பட்டன; ஒரு டிரைவர் லைசென்சுமஜெனிவாவில உள்ள ஒரு தனி கிளப்பின் உறுப்பினர் அனடயாளச் சீட்டு கொடுககப்பட்டது. ரோமரோவுக்கு ஒப்பந்தப்படி கொடுககவேண்டிய பாக்கி ரூ. 10 கோடி டாலர் டெபாசிட் செய்யப்பட்டுள்ள லாசன்னு வங்கிச் 'செக்' ஒன்றும் கொடுக்கப்பட்டது. இன்னும் ஒன்று ரோமெரோவுககு கொடுக்க வேண்டும். அதை தனிமையில் மைக் பினனல் தருவான்.

லாசன்னுவில்,ரோமெரோ உடனடியாக தன்னிடம் கொடுக்கப்பட்ட செக்கில் 1 கோடியை பிராங்கைக வேறு ஒரு வங்கிக்கு மாற்றி வைத்துககொண்டான். இவ்வாறு மாற்றப்பட்டது அமெரிக்கர்கள் யாருககும் தெரியாது. பின்பு, அவன் ஒரு கார் மூலம் பாரிசுக்கு விரைந்தான் மே. 30. மநாள் மாலையில், ஜான் கென்னடியைபாரிஸ்நகரமேவரவேற்றுக்கொண்டிருக்கிறது. அப்மொழுது ரோமேரோவிடம எவ்வாறு கென்னடியைச் சுட்டுக் கொல்லவேண்டும் என்ற சதித்திட்ட கொடுக்கப்பட்டது. இதற்காகமூன்று இடங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அதில் ஏதேனும ஒன்றிலிருந்து கெனனடியைச் தீர்த்துக் கட்டவேண்டும். கென்னடியைச் சுட்டுத் தீர்த்தவுடன் அவனை ஏற்றி கொண்டு வெகுதூரம் பறந்து செல்ல ஆங்காங்கே பல கார்கள் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளன.

### அமெரிக்கர்களிடமே விட்டுவிடு

ஓட்டலில் இருந்த ரோமேரோ, சதித்திட்டத்தை மீண்டும் படித்தான் அது அவனிடம் திடீரென கொடுக்கப்பட்டது. அத்திட்டத்தின்படி காரியம் முடிந்துவிட்டால் இந்தக் கொலைப்பழிஇரகசிய இராணுவ அமைபபின் மீது போடப்படும் என்பதை அறிந்து கொண்ட அவன் தனது ஓட்டலில் இருந்து நேரடியாக அல்ஜியர்சுக்கு தொலைபேசியில் தொடர்பு கொண்டான்.

அங்கிருந்து அவனுக்கு கிடைந்த பதில். "எல்லாச் செயல்களிலிருந்தும் உடனடியாக விலகிச்சென்றுவிடு. அமெரிக்கர்களின் விவகாரத்தை அவர்களிமே விட்டுவிடு" என்பதேயாகும்.

எனவே உடனடியாக, அவன் அமெரிக்காகளுக்கு டிமிககி கொடுத்து விட்டு திறமையாகத் தப்பித்து சுவிச்சர்லாந்துக்குப் பறந்தான அங்கு வங்கியிலிருந்த தனது 10 கோடி பிராங்குகளை திரும்பப் பெற்றுக கொண்டு ரோமுக்குச் சென்று விடடான், பின்னர், அவன கூலிக்காக வேலை செய்யக்கூடிய ஒரு பிரிவினரோடு சேர்ந்து காங்கோ போய்ச் சேர்ந்தான். இப்பொழுது மைக்கின் ஆட்கள் இவனைக் கண்டு பிடிக்க முடியாது அல்லவா?

### வெளியிடவேண்டிய அவசியமென்ன?

தற்போது தென் அமெரிக்காவில் ஒரு இடத்தில் ரோமேரோ வாழ்ந்து வருகிறான். இத்தகைய இரகசியததை ஏன் வெளியிடுகிறாய் என்று கேட்கப் படடதற்கு, ஒரு மனிதன் தனது வாழ்நாள் முழுதும் மனதுக்குள்ளேயே ஒரு விஷயத்தை வைத்துக் கொள்ளமுடியாது எனறு சொன்னான். அந்த இரகசியத்தைச்சொல்லதருணம் வந்தது சொன்னேன் என்றான்.

இவ்வளவு உண்மையை சொன்னபோதிலும் தனது உண்மையான பெயரைச் சொல்லவில்லை; அதுமட்டுமல்ல முகத்தை மறைத்துக் கொண்டான். நான்கூறிய இந்த கதையை என்னால் நிரூபிக்கவும் முடியும் என்று உறுதியாகச் சொன்னான்.

—"நியூ டைம்ஸ்"

---

## ராம்பூரில் ஓநாய்கள் படையெடுப்பு

### 50 குழந்தைகள் பலி

ராம்பூர். நவ, 17—

ராம்பூர் மாவட்டம் சகாபார் பகுதியில் கடந்த ஒரு வாரத்தில் ஓநாய்கள் 50 குழந்தைகளை பிடித்துச் சென்று விட்டதாகவும் இக்குழந்தைகள் ஒரு வயதிலிருந்து 7 வயதுவரையுள்ளவை என்றும் பி. டி. ஐ. செய்தியொன்றுகூறுகிறது.

60வயதுகிழவி ஒருத்தியையும் ஓநாய்கள் பிடித்துச சென்று கொன்று விட்டதாகவும் அறிவிக்கப்படுகிறது.

---

## லோகோ ஊழியர்கள் போராட்டம் எதிரொலி

### பழிவாங்குதல்கள் தொடருகிறது

திருச்சி, நவ. 20—

அண்மையில் நடந்து முடிந்துள்ள லோகோ ரன்னிங் ஸ்டாப் போராட்டத்தின் விளைவாக பல பொதுப் பிரச்னைகள் எழுந்துள்ளது அறிந்ததே. 6000-க்கும மேற்பட்ட ரன்னிங் ஸ்டாப் தொழிலாளர்களுக்கு சர்வீஸ் பிரேக் தரப்பட்டுள்ளது.பல டிரைவர்கள் பயர்மென்களை ஊர் விட்டு ஊர் மாற்றம் செய்வது, பாஸ கொடுக்க மறுப்பது போன்ற தொல்லைகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது. டி. ஐ. ஆர். சட்டத்தினகீழ் கைதானவர்களின் மீதான வழக்குகள் தீவிரமாக நடத்தப்பட்டு வருகிறது. அதற்கு தங்களை பாதுகாக்க வழக்கறிஞர்களை ஏற்பாடு செய்யும் நிர்ப்பந்தத்திற்கு தொழிலாளர்கள் ஆளாக்கப்பட்டுள்ளார்கள்.

### போர்டு டைரக்டருடன் அசோசியேஷன் தலைவர்கள் சந்திப்பு

ரன்னிங் தொழிலாளர்களுடைய குறைகளை போராட்டம் நின்றவுடன் கவனிப்பதாக உறுதிகூறப்பட்டது. ஆனால் இன்று வரை எதுவும் செய்யவில்லை. இதையெல்லாம் ரயில்வே அதிகாரிகளுக்கு சுட்டிக்காட்ட அசோசியேஷன் தலைமை ரயில்வே போர்டிடம் பேசவேண்டும் என்று கேட்டுள்ளதும் அனைவரும் அறிந்ததே. இதையொட்டி ரயில்வே போர்டு டைரக்டர் திரு. எஸ். கே. பூரி என்பவர் 7—11—72-ல சென்னைக்கு வந்து லோகோ ரன்னிங் ஸ்டாப் அசோசியேஷனின் தலைமைக் குழுவைச் சந்தித்ததாக தகவல் கிடைத்துள்ளது.

அந்தக் குழுவில் திரு இரத்தின சபாபதி, திரு. டிக்ரூஸ், திரு. தசரதன், திரு. சூரிய பிரகாசராவ் திரு. துரைசாமி, திரு. பி. வி. எஸ். ராவ் ஆகியோர் இடம்பெற்றுள்ளனர். அவர்கள் 2 மணி நேரம் தொழிலாளர்களது குறைகளைப் பற்றி போர்டு டைரக்டரிடத்தில் பேசுகையில் ஜெனரல் மானேஜரும் கூட இருந்தார்.

---

## கேரள நில மீட்புப் போராட்டம் புதிய இடங்களுக்கு பரவுகிறது

### அழிக்கப்பட்ட குடிசைகள் மீண்டும் எழுப்பப்படுகின்றன

கொச்சி, நவ. 20—

கேரளத்தில் உபரி நில மீட்புப் போராட்டம், 19-ம் தேதியிலிருந்து பல புதிய இடங்களுக்கு பரவியுள்ளது. நிலமற்ற பாட்டாளிகளின் போராட்ட வெள்ளம் கேரள மாநிலமெங்கும் கரைபுரண்டோடுகிறது.

நிலச்சீர்திருத்த சட்டத்திற்கு முரணாக நிலச்சுவான்தார்கள் ஒளித்து வைத்துள்ள உபரி நிலங்களிலெல்லாம் குடிசைசளைக் கட்டுவதும்-விவசாய வேலைகளைத் துவக்குவதும் நடைபெற்றுக் கொண்டு வருகிறது.

போராடும் மக்கள் மீது, இண்டிகேட்- வலது கம்யூனிஸ்ட் அரசு, போலீஸ் அடக்குமுறையையும் ஏவிவிட்டுள்ளது. கைது செய்வதும் கட்டிய குடிசைகளை நாசம் செய்வதுமான நாசகாரச் செயலை அரசு நடத்தி வருகிறது.

எனினும் இத்தகைய அடக்குமுறைகளுக்கெல்லாம் சிறிதும் அஞ்சாது விவசாயிகளும், விவசாயத தொழிலாளர்களும் புதிய புதிய குடிசைகளை எழுப்பி வருகின்றனர்.

19-ம் தேதிய 5-ம் நாள் போராட்டத்தின் விவரம் வருமாறு:—

தாயில்காட்டுக்கரை என்னுமிடத்தில், 19-ம் தேதியன்று ஒரு நிலச்சுவான்தாரின் உபரி நிலத்தில் நிலமற்ற குடும்பங்கள் பிரவேசித்து குடிசைகள் கட்டின.

இந்தக் குடிசைகளில் இருந்த 8 குடும்பங்களையும் போலீசார் கைது செய்தனர். பெண்கள், குழந்தைகள் உள்பட 23 பேர் கைது செய்யப்பட்டனர். கட்டிய குடிசைகளை யெல்லாம் வெறித்தனமாகப் போலீஸ் நாசம் செய்துவிட்டது. குடிசைகளில் உணவுசமைதது சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதே, போலீசின் இந்த வெறிச் செயல் நடந்தேறியது.

### புதிய குடிசைகள்

எழுபுன்ன பஞ்சாயத்தில் உள்ள ஒரு உபரி நிலத்தில் 5 புதிய குடிசைகள் கட்டப்பட்டு சமையல் வேலையும் நடந்தது இங்கும் போலீஸ் அடக்குமுறை ஏவி விடப்பட்டது.

### வல்லத்தோடு

வல்லத்தோடில் ஒருநிலச்சுவான்தாரின் உபரி நிலத்தில் குடிசைகள் கட்டிய 3 பெண்களைப் போலீஸ் கைது செய்தது.

### கூத்தாளி

கோழிக்கோடு மாவட்டத்தைச் சேர்ந்த கூத்தாளி எஸ்டேட்டில் 25 விவசாயத் தொழிலாளர்கள் பிரவேசித்து 10 குடிசைகளைக் கட்டினர். இங்கு சோசலிஸ்ட் கட்சித் தலைமையிலும் எட்டுக் குடிசைகள் கட்டப்பட்டன.

### திருச்சூர்

கோடச்சேரி காட்டு நிலத்திலும் நிலமற்ற குடும்பங்கள் நுழைந்து குடிசைகள் கட்டின.

### சுருளி

சுருளி, கத்திப்பாறை, ஆள்பாறை, மழுவடி— ஆகிய இடங்களில் குடியிருப்பு அகற்றப்பட்ட ஏழை விவசாயிகள் சென்ற 19-ம் தேதி

(4-ம் பக்கம் பார்க்க)

---

## ஐ. என். டி. யூ. சி. தலைவரின் துரோகம்

திருச்சி, நவ. 20—

இந்திய தேசீய தொழிற்சங்க காங்கிரசின் தொழிற்சங்க பணி நாடறிந்ததே. தொழிற்சாலைகளில் வாரத்திற்கு 7 நாட்களும் தொழிலாளர்கள் வேலை செய்ய வேண்டும் என்று ஆளும் கூட்டம் சமீபத்தில் ஆலோசனை தெரிவித்திருந்தது. ஐ. என். டி. யூ. சி. தலைவர் ராமானுசம் உடனே அறிக்கை வெளியிட்டார்.

### எதிர்க்கவில்லை

தொழிற்சாலைகளில் வாரத்திற்கு ஏழு நாட்கள் வேலையை இ. தே. தொ. ச. காங்கிரஸ் எதிர்க்கவில்லை. ஆனால் அதன் விளைவுகள் பற்றி முத்தரப்பு அரங்கில் விவாதிககவேண்டும் என்று கூறியுள்ளார்.

### துரோகத்திற்கு எல்லையில்லையா?

தொழிலாளி வர்க்கத்திற்கு துரோகம் செய்வதில் ஐ. என். டி. யூ. சி. ஒரு வரம்பு கூட வைத்துக கொள்ளவில்லை என்று இதன்மூலம் தெரிகிறது. அரசாங்கம் ஆலோசனை தெரிவிப்பதற்குமுன்னலேயே விழுந்தடித்துக்கொண்டு 7 நாட்கள் வேலைக்கு ஆதரவளிக்க முன்வந்துள்ளனர். முன்புதொழிலாளர்கள் போனஸ் கேட்ட போது ஐ. என். டி. யூ. சி. தலைவர்கள் நையாண்டி செய்தார்கள். இன்று 7 நாட்களும் வேலை என்கிறார்கள். இது எங்கேபோய் முடியுமோ?

---

## கயிறு தொழிலாளர் மறியல்

திருவனந்தபுரம். நவ. 20—

கேரள அரசுத் தலைமை அலுவலகம் முன்பு சென்ற 17-ம் தேதியன்று ஏராளமான கயிறு தொழிலாளர்கள் மறியல் போராட்டம் நடத்தினர்.

பல நாட்களாக அரசாங்கத்தினால் நிறைவேற்றப் படாமல் இருக்கும் தங்களது நியாயமானகோரிக்கைகளை நிறைவேற்ற வற்புறுத்திடவே, கயிறு தொழிலாளர்கள் மறியல் செய்தனர். இந்தப் போராட்டத்தில் ஏராளமான பெண்களும் கலந்துகொண்டனர்.

---

## போத்தனூரில் மாபெரும் ஆர்ப்பாட்டம்

போத்தனூர், நவ. 20—

போத்தனூரிலுள்ள ரயில்வே தொழிலாளர்களுக்கு நகராட்டுப்படியும், வீட்டு வாடகைப்படியும தர வேண்டுமென்று தடசிண ரயில்வே எம்ளாயீஸ யூனியன் ஊழியர்கள் காலவரையன்றி உண்ணுவிரதம் இருந்தனர். பின்னர் போராட்டத்தின் அடுத்த கட்டமாக அண்மையில் மாபெரும் ஆர்ப்பாட்டப் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

### கூட்டுக் கமிட்டி

இப்போராட்டத்தை ஆதரித்து தட்சிண ரயில்வே எமபளாயீஸ் யூனியன், சதர்ன் ரயில்வே மஸ்தூர் யூனியன், சங், முனனேற்ற சங்கம், 4-வது வகுப்பு ஊழியர்கள் சங்கம் ஆகிய சங்கங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட கூட்டுக்கமிட்டி அமைக்கப்பட்டது.

### 3000 தொழிலாளர்கள் பங்கு கொண்டனர்

கூட்டுக் கமிட்டியின் அறைகூவலுக்கிணங்க தங்களது கோரிக்கையை பிரதமருக்கும், மற்றவர்களுக்கும் தெரிவிக்க மாபெரும் ஆர்பாட்டக்கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. ஆர்ப்பாட்டக் கூட்டத்தில் 3000க்கும் மேற்பட்ட தொழிலாளிகள் பங்கு கொண்டனர். இது போன்ற உணர்ச்சிமிக்க கூட்டம போத்தனூரில் இதுவரை நடந்ததில்லை என்று கூறப்படுகிறது.

---

## கண்ணனூரில் பழிவாங்கும் படலம்

### தலைவர்கள் டிரான்ஸ்பர்

கண்ணனூர், நவ, 20—

கண்ணனூர் லோகோ ஷெட்டில் பணிபுரியும் இன்ஜின் கிளீனர்கள்டி கே.ராமகிருஷ்ணனையும்,கே பி ஹரிதாசையும் கொச்சிக்கு டிரான்ஸ்பர் செய்து உத்திரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. இவர்கள் தட்சிண ரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன் கண்ணனூர் கிளையின் நிர்வாகிகளாவார்கள்.

அண்மையில் நடந்த லோகோ ரன்னிங் ஸ்டாப் போராட்டத்தில் இவர்கள் தீவிரமாக பங்கு கொண்டிருந்தார்கள். இதையொட்டி இவர்களை பழிவாங்க வேண்டும் என்ற எண்ணத்துடன் நிர்வாகம் கண்ணனூரிலிருந்து கொச்சிக்கு மாற்றியுள்ளது.

### கண்டனம்

இந்த டிரான்ஸ்பர் உத்திரவைக் கண்டித்து கண்ணனூரிலுள்ள தொழிலாளர் தலைவர்களும், டி. ஆர். இ. யூ யும் அறிக்கைகள்வெளியிட்டுள்ளனர். அவர்கள் தங்களது அறிக்கையில் தொழிறசங்க இயக்கத்தை நசுக்கும எண்ணத்துடன் செய்யப்பட்ட இந்த அநியாயமான டிரானஸ்பர் உத்திரவுகளை வாபஸ் பெற வேண்டும என்று கோரியுள்ளனர்.

# மதுரை கலெக்டர் அலுவலக முறைகேடுகள்

## அதிகாரிகள் 75 ரூபாய்களுக்காக கடைநிலை ஊழியர்களை சரண்டர் செய்வதா?

### சங்கத் தலைவர் கே. சுப்ரமணியம் கண்டனம்

மதுரை, நவ. 22—

மதுரை கலெக்டர் அலுவலக மேலதிகாரிகள் தங்களுக்கு அனுமதிக்கப்பட்ட ஊழியர்களின் எண்ணிக்கையைக்குறைத்து அப்படிக் குறைக்கப்பட்ட ஒவ்வொரு ஊழியர்களுக்குமாக, ரூ 25 ரொக்கப்படியை வாங்கிக் கொள்ளுகிறார்கள் என்பதாகவும், ஊழியர்களின் எண்ணிக்கை குறைக்கப்பட்டதால், மீதமுள்ள ஊழியர்களுக்கு வேலைப்பளு அதிகரித்து கஷ்டப்படுவதாகவும், இதில் அரசு உடனே தலையிட்டு நியாயம் வழங்காவிட்டால் போராட்டம் நடத்தப் போவதாகவும் தமிழ்நாடு அரசு கடைநிலை ஊழியர்கள் சங்கம், மதுரை வருவாய்துறை சங்கத் தலைவரும், மாநிலக் கமிட்டி உறுப்பினருமான திரு. கே. சுப்ரமணியம் அவர்கள் அறிக்கை விடுத்துள்ளார், அவர் தமது அறிக்கையில் குறிப்பிடுவதாவது:—

#### ஆள் குறைப்பு செய்தனர் வேலைப்பளு சுமத்தினர்

அரசு கடைநிலை ஊழியர்கள், மதுரை மாவட்டத்தில் படும் இன்னல்கள் பல. 1965-ம் ஆண்டில் ஏற்பட்ட ஆள் குறைப்பின் விளைவாக கலெக்டர் அலுவலகத்தில் ஒரு செக்ஷனுக்கு ஒரு கடை நிலை ஊழியர் வீதம் பணியாற்றி வந்தார்கள். மேலும் ஆள் குறைப்பு செய்யப்பட்டதால், இப்பொழுது 2 செக்ஷன்களுக்கு ஒரு கடைநிலை ஊழியர் வீதம் பணியாற்றி வருகிறார்கள்.

அந்த ஊழியர்கள் கலெக்டர் அலுவலக வேலையை மட்டுமின்றி, கலெக்டர் அவர்களுடைய முகாமிற்கும், மாவட்ட வருவாய் அதிகாரி அவர்கள் முகாமிற்கும் தபால் கொண்டு போக வேண்டும். மேலும் அவசரத் தபால்கள் என்று பல இடங்களுக்கும் போக வேண்டும்.

இது மட்டுமா? காலையில் அதிகாரிகள் இல்லத்திற்கு சென்று, தபால் பெட்டிகளை எடுத்து வருவதுடன் மாலை தபால் பெட்டிகளைக் கொண்டு சேர்க்கவேண்டும்.

#### 75 ரூபாய்க்காக

ஆனால் ஒன்று. கெஜட் பதிவு அதிகாரிகள் ஒவ்வொருவருக்கும் அனுமதிக்கப்பட்ட கடைநிலை ஊழியர்கள் எத்தனைபேர் என்பதை அவர்களே அறிவார்கள். அப்படி இருந்துமகூட அதிகாரிகள் ஒரு கடைநிலை ஊழியரை, தேவையில்லையென்று சரண்டர் செய்துவிட்டு, அதற்குப் பதிலாக ரூ. 75 ரொக்கப்படி பெற்றுக் கொள்கிறார்கள்.

இப்படி அதிகமான எண்ணிக்கையில் சரண்டர் செய்ததின் விளைவாக, கடைநிலை ஊழியர்கள் அதிகமாக பாதிக்கப்பட்டார்கள். அதனால் அவர்கள் படும் வேதனைகளுக்கு அளவே இல்லை.

#### சாக்குப்போக்கு

இந்தக் கஷ்ட நிலையை அதிகாரிகளிடம் எடுத்துச் சொன்னால், "நாங்கள் தப்பாக ஒன்றும் செய்யவில்லை. அரசு உத்தரவு அப்படி இருக்கிறது. அதனால்தான் நாங்கள் கடைநிலை ஊழியர்கள் அதிகமாகத் தேவையில்லை என்று சரண்டர் செய்துவிட்டு, ரூ. 75 ரொக்கப்படி வாங்கிக் கொள்ளுகிறோம்" என்கிறார்கள்.

அரசு ஆணைகளைப்பற்றி அழகாக எடுத்துரைக்கும் அதிகாரிகள், இப்படி சரண்டர் செய்துவிட்டு, தங்கள் சொந்த வீட்டு வேலைகளுக்கு அரசு ஊழியர்களைப் பயன்படுத்துகிறார்களே, இது என்ன நியாயம்? அப்படிப் பயன்படுத்தக் கூடாது என்று அரசு விதி இருப்பது மட்டும் அவர்களுக்குத் தெரியாதா?

#### அரசு விதி எங்கே?

அதிகாரிகளுக்கு அனுமதிக்கப்பட்ட கடைநிலை ஊழியரைவைத்துவேலை வாங்க வேண்டும். அதில் ஒருவரை சரண்டர் செய்துவிட்டு, ரூ. 75 பெற்றுக் கொண்டு, அலுவலகத்திலுள்ள கடைநிலை ஊழியர்கள், செயின்மேன்கள், வாட்ச்மேன்கள், தோட்டக்காரர்கள், மசால்சி ஆகிய இப்படிப்பட்டவர்களை, தங்களுடைய சொந்த வீட்டில் வைத்து வேலை வாங்குகிறார்களே. இதற்கு எந்தச் சட்டம் சம்மதம் அளிக்கிறது?

#### எத்தனை முறை கேடுகள்?

மதுரை கலெக்டர் அலுவலகத்தில் நடக்கும் அடாத செயல்களைப் பாருங்கள்? மாவட்ட ஆட்சித் தலைவருக்கு 9 பேர்கள் இருக்க வேண்டும். இதில் ஒருவரை சரண்டர் செய்திருக்கிறார்கள்.

#### டிரைவர் சம்பளம்

கலெக்டர் அவர்களின் கூடுதல் தனி உதவியாளர், தன்னுடைய சொந்த காருக்கு ஒரு டிரைவரைப் போட்டுக் கொண்டு, ஒரு கடை நிலை ஊழியரை சரண்டர் செய்துவிட்டு, பிறகு அரிஜன நல தனித் தாசில்தார் அலுவலக கடை நிலை ஊழியர் ஒருவரை எடுத்து வேலை வாங்கி வருகிறார். இவர் ஊதியமும் பிரயாணப் படியும் தாசில்தார் அலுவலகத்தில் வாங்கி வருகிறார்.

#### யாருக்கோ வேலை? எங்கோ சம்பளம்?

தனித் துணை கலெக்டர் (ஆப்காரி) விஷயம் என்ன? இவருக்கு அனுமதிக்கப்பட்ட கடைநிலை ஊழியர்கள் 2 பேர். இதில் ஒருவரை சரண்டர் செய்துவிட்டு— ரூ. 75-ஐப் பெற்றுக்கொண்டு— தாலுகா ஆப்காரி துணைத் தாசில்தார் (வடக்கு, தெற்கு) அலுவலகத்திலிருந்து 2 கடைநிலை ஊழியர்களை தனது சொந்த வீட்டு வேலைகளைச் செய்ய பயன்படுத்தி வருகிறார். இவர்களுக்கான சம்பளம், பிரயாணப்படி முதலியவற்றை தாலுகா அலுவலகத்தில் வாங்கி வருகிறார்கள்.

மேலும், தன் சொந்த கார் ஓட்டுவதற்கு பெரியகுளம் ஆப்காரி துணைத் தாசில்தார் அவர்களின் கடைநிலை ஊழியரை தன் சொந்த வேலைக்கு மதுரையில் வைத்து வருகிறார். இவருக்கு ஊதியமும் பிரயாணப்படியும் பெரியகுளம் ஆப்காரி துணைதாசில்தார் ஆபீசில் வாங்கி வருகிறார். இது முறைதானா?

#### ஏமாற்றலாமா?

கள்ளர் சீரமைப்பு துணைக் கலெக்டர் விஷயம் என்ன? இருவருக்கு கடைநிலை ஊழியர் 2 பேர். அதில் ஒரு ஊழியரை சரண்டர் செய்துவிட்டு, அலுவலகத்தில் உள்ள கடைநிலை ஊழியர்கள் இருவரையும், கள்ளர் சீரமைப்புப் பள்ளியில் உள்ள ஒருவரையும் ஆக 3 பேர்களையும் தன் சொந்த வீட்டு வேலை வாங்கி வருகிறார். அரசை ஏமாற்றி ரூ 75-ம் பெற்று வருகிறார். இப்படிச் செய்யலாமா?

#### வீட்டிலே வேலை சர்க்காரிடம் சம்பளம்

தனி துணைக் கலெக்டர் (சர்வே). ஒருவரை சரண்டர் செய்துவிட்டு இரண்டு ஆட்களை வீட்டு வேலை வாங்குகிறார். இது சரிதானா?

மாவட்ட உணவு சப்ளை அதிகாரியோ, தனக்கு அனுமதிக்கப்பட்ட இருவரில், ஒருவரை சரண்டர் செய்துவிட்டு, ரூ. 75 வாங்கிக்கொள்கிறார். தன் சொந்த வீட்டு வேலைக்கு 2 கடைநிலைஊழியர்களையும் அலுவலகத்திலுள்ள மசால்சியையும் வீட்டில் வைத்து வேலை வாங்கி வருகிறார். அலுவலகத்தில் மசால்சி செய்யவேண்டிய வேலைகளை மற்ற ஊழியர்கள் பார்க்கவேண்டியிருக்கிறது. இது நியாயம்தானா?

இதுபோலவே, மாவட்ட நிலவரித்திட்ட அதிகாரியும் தனக்கு அனுமதிக்கப்பட்ட 2 கடைநிலை ஊழியர்களில் ஒருவரை சரண்டர் செய்துவிட்டு, ரூ. 75 பெற்றுக் கொண்டு, அலுவலகத்தில் உள்ள கடைநிலை ஊழியர்களைத் தன் சொந்த வீட்டு வேலைகளுக்குப்பயன்படுத்தி வருகிறார்.

இதே போன்றே இன்னொரு உதவி ஆணையாளரும், ஒரு கடைநிலை ஊழியரைச் சரண்டர் செய்துவிட்டு — ரூ 75 பெற்றுக் கொண்டு, அலுவலகத்திலுள்ள புராசஸ் சர்வேயரையும் செயின்மேன்களையும் வீட்டு வேலைக்குப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்.

இதே மாதிரி தான் கொடைக்கானல நிலை ஒப்படைப்பு தனித துணைக் கலெக்டர் அவர்களும ஒருவரை சரண்டர் செய்துள்ளார்.

#### வேலைக்கு குந்தகம்

இதனால் அலுவலக வேலைகளுக்கு குந்தகம் ஏற்படவில்லையா? இதர கடைநிலை ஊழியர்களுக்கு வேலைப்பளு அதிகரித்துள்ளதையும் அறிந்துகொள்ள முடியவில்லையா?

#### முறையிட்டோம்

சரண்டர் செய்வதின் மூலம் அநேக கடை நிலை ஊழியர்களின் குடும்பங்கள் தெருவில் நிற்கின்றன. ரூ. 75க்காக இப்படிச்செய்யவாலா?

எனவே, அதிகாரிகள் ஏழைகளை வாழ வைப்பதற்காக, தங்களின் சரண்டர்களை ரத்துச் செய்துவிட வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்

அடுத்து, தமிழக அரசும் இதில கவனம செலுத்தி, இந்த சரண்டர் உத்திரவை ரத்துச்செய்திட வேண்டுமென்றும்கேட்டுக்கொள்ளுகிறோம்.

இதற்கான கிளர்ச்சி தீவிரமாக நடைபெறுமென்றும் அறிவிக்கப்படுகிறது

---

# சோவியத் நாட்டில் எழுத்தறிவின்மையை போக்கியது எப்படி?

எழுத்தறிவின்மையைப் போக்குவது என்பது பல நாடுகளை, குறிப்பாக வளரும் நாடுகளை எதிர்நோக்கியுள்ள கடுமையான பிரச்னைகளில் ஒன்றாகும். எழுத்தறிவின்மையைப் போக்குவது என்பது சமுதாயத்தின் பொருளாதார, அரசியல் சமூக வளர்ச்சியோடு மிகவும் சம்பந்தப்பட்டதொரு பிரச்னையாகும்.

#### குறுகியகால வெற்றி

சோவியத் யூனியன் போன்ற சோசலிச நாட்டை எடுத்துக்கொண்டால், அங்கு மக்களின் எழுத்தறிவின்மையைப் போக்கும் முயற்சி 1917-ல் தொடங்கப்பெற்று இருபதே ஆண்டுகளில் வெற்றி பெற்றுள்ளது.

1917-ல் அந்நாட்டில் எடுத்த குடிக்கணக்கின்படி மக்களில் 21 1 சதவிகிதம் பேரே எழுத்தறிவு பெற்றிருந்தனர்: பெண்களில் 7 சதவிகிதம் பேருக்கே எழுதவும் படிக்கவும் தெரிந்து இருந்தது. ரஷ்யாவின எல்லைப் புறப் பகுதிகளில் வசித்து வந்த மக்களில் பெரும்பாலோர் அநேகமாக எழுத்து வாசனையே இல்லாதவர்களாகத்தான் இருந்தனர். உதாரணமாக அஜெர்பய்ஜானில் 95.51 சதவிகிதத்தினர் எழுத்தறிவற்றவர்களாக இருந்தனர்.

#### பொருளாதார சீரமைப்புடன் சேர்த்து

எழுத்தறிவின்மையைப் போக்கும் இயக்கத்தின் போது, சோவியத் யூனியனில் 6 கோடி வயது வந்தோர் எழுதவும் படிக்கவும் கற்றுக் கொண்டனர். அதிலும் இந்த இயக்கம் சோவியத் தேசியப் பொருளாதாரத்தைச் சீரமைக்க வேண்டிய ஒரு சிரமமான காலகட்டத்தில், மக்களாட்சியை அழித்தொழிக்க முயன்ற அன்னியர் படையெடுப்பை முறியடிக்க வேண்டியிருந்த காலத்தில் பல தேசிய இன மக்கள் தமது சொந்த அரிச்சுவடியைக் கூடக் கொண்டிராத காலத்தில் நடைபெற்றது என்பதையும் நாம் மறந்துவிடுவதற்கில்லை.

#### ஒன்றுபட்ட நடவடிக்கை

எழுத்தறிவின்மையைப் போக்கும் இயக்கத்தை அரசாங்கம் தனது முதன்மையான பெருங்கடமையாகக் கருதியது. ஆளும் கட்சி, அரசாங்க அதிகாரிகள், தொழிற் சங்கங்கள் ஆகிய அனைவரும் எழுத்தறிவின்மைமை எதிர்த்து ஒரு வெகுஜன இயக்கத்தையே உருவாக்கும் திசைவழியில் ஒன்றுபட்ட நடவடிக்கைகளை மேற்கொண்டனர். ஒவ்வொருவருக்கும் எழுதப் படிக்கக் கற்றுக் கொடுப்பது, புதிய சோஷலிச அரசின வெற்றிக்கும் முன்னேற்றத்துக்கும் உரிய நிபந்தனைகளில் ஒன்றாகக் கருதப்பட்டது.

எழுத்தறிவின்மையைப் போக்கும் இயக்கம் சோவியத் யூனியனில், குறிப்பாக மத்திய ஆசியக் குடியரசுகளில் பல பிரச்னைகளை எதிர்நோக்க நேர்ந்தது. மத்திய ஆசியக் குடியரசுகள் பொருளாதார ரீதியில் மிகவும் பின்தங்கி இருந்தன. முஸ்லிம் மாதர்கள் மத்தியில் "பர்தா" அணிந்து தம்மை மறைத்துக்கொள்ளும் பழக்கம் பரவலாக இருந்தது. இவையெல்லாம் எழுத்தறிவின்மையைப் போக்கும் இயக்கத்தை வெற்றிபெறச்செய்வதில் தடைக்கற்களாக இருந்தன.

#### லெனின் ஆணை

1919 டிசம்பரில் லெனின் "ரஷ்ய ஒன்றிணைப்பு மக்களுக்கிடையேஎழுத்தறிவின்மையைப் போக்குவது பற்றிய" அரசாங்க ஆணையில் கையெழுத்திட்டார். 1920 ஜனவரி 21 அன்று கல்வித் துறை மக்கள் கமிசார் அலுவலகம்இந்த ஆணையின் உள்ளடக்கங்களை நிறைவேற்றுவதற்கான உத்தரவுகளை வழங்கியது உதாரணமாக, எழுத்தறிவற்றவர்கள் 15 பேருக்குமேல் உள்ள ஒவ்வொரு கிராமத்திலும் ஓர் ஆரம்பப்பள்ளி இருக்க வேண்டும் என்று இந்த ஆணை கூறியது.

#### பெண்கள் பங்கு

எழுத்தறிவின்மையைப் போக்கும் இயக்கத்தில் பெண்கள் மேற்கொண்ட பாத்திரத்தையும் குறைத்து மதிப்பிடுவதற்கில்லை. இது விஷயத்தில் கல்வித் துறையில் பிரபலமானவரும் குடியரசின் ராணுவ—புரட்சிகரக் கவுன்சிலின் அரசியல் பிரிவின் உறுப்பினருமான திருமதி குரூப்ஸ்காயாபுரிந்த அரும்பெரும் சேவைகளையும் சோவியத் மக்கள் மறந்துவிட மாட்டார்கள்.

நாட்டின் ஒவ்வொருபகுதியிலும் எழுத்தறிவின்மையைப் போக்கும் முயற்சியில் ஈடுபடுவதற்கு ஏராளமான பணமும் தேவை எனபது சொலலாமலே விளங்கும். இதனை சோவியத் யூனியன் எவ்வாறு சமாளித்தது? சோவியத் யூனியனில் தேவையான நிதி வசதிகளைப் பெறுவதற்கு அரசாங்க ஸ்தாபனங்களும் பொதுஜன ஸ்தாபனங்களும்தான் ஆதாரங்களாக இருந்தன. எழுத்தறிவின்மையைப் போக்க உதவும் கல்வி ஊழியர்களைப் பயிற்றுவிக்கும்— வகுப்புகளுக்கும் சோவியத் அரசு நிதியுதவி செய்தது. 1921 ஜனவரி முதல் தேதியன்று, குறுகிய - கால வகுப்புகளில் படித்துப் பட்டம் பெற்ற ஆசிரியர்கள் முதலியோர் உட்பட, ரஷ்ய சமஷ்டியில் 1,24,000 ஆசிரிய- ஊழியர்கள் இருந்தனர்.

1939 வாக்கில் சோவியத் யூனியனில் எழுத்தறிவு பெற்றோரின் தொகை மொத்த மக்களில் 89.1 சதவிகிதமாக அதிகரித்துவிட்டது அதாவது ஆண்களில் 95.1 சத விகிதம் பேரும் பெண்களில் 83.4 சதவிகிதம் பேரும் கல்வியறிவைப் பெற்றிருந்தனர்.

#### பொதுவுடைமைக் கண்ணோட்டம்

சோவியத் கல்விமுறை நாட்டின் முற்போக்கான ஜனநாயகக் கல்விமுறையின் மரபுகளையும், புரட்சிக்குப்பின புகுத்தப்பட்ட புதிய சோசலிச மாற்றங்களையும் அடிப்படையாகக் கொண்டே அமைந்ததாகும். சமுதாயம், விஞ்ஞான தொழில் நுட்ப முன்னேற்றம், மக்களின கலாசார முன்னேற்றம், வேலையின் பால் கம்யூனிஸ்டுக் கண்ணோட்டம் முதலியவை எவற்றையெல்லாம் கோருகின்றனவோ, அவற்றுக்கேற்பவே பொதுக் கல்வி முறை சோவியத் யூனியனில வளர்ச்சியுறுகிறது.

மிகவும குறுகிய காலத்தில் சோவியத யூனியனில் எழுத்தறிவின்மையை முற்றிலும் போக்கிய சாதனையானது, இந்தப் பிரச்னைக்கு விரைவில தீர்வு காண வேண்டியுள்ள வளரும் நாடுகளுக்கு நல்லதொரு முன்னுதாரணமாகும்.

---

# மின் தாக்குதலால் தொலைபேசி ஊழியர்மரணம்பாதுகாப்புகோரி ஆர்ப்பாட்டம்

குடியாத்தம், நவ. 12—

குடியாத்தத்தில் தொலைபேசி கம்பத்தின் மேல் பணியாற்றிக் கொண்டிருக்கும் போது லைன்மேன் தோழர் பாலசுந்தரம் மின் தாக்குதலால் இறந்தார். இதனை அனைவரின் கவனத்திற்கும் கொண்டு வர 15-11-72 அன்று "லைன் ஸ்டால் ஊழியர் பாதுகாப்புத்தினம்" வேலூரில் அனுஷ்டிக்கப் பட்டது.

அன்று கறுப்புச் சின்னம் அணிந்து மாலை தந்தி, தொலைபேசிதுணைக்கோட்ட அலுவலகங்கள் உள்ளூர் தொலைபேசி நிலயம் ஆகியவற்றின் முன்பு லைன்ஸ்டாப் நான்காம் பிரிவு, மூன்றும பிரிவு ஊழியர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

#### கோரிக்கைகள்

இறந்த லைன்ஸ்டாப் தோழருக்கு எலக்ட்ரிக் டெஸ்டர் இரப்பர் கையுறை வழங்கப் படாததைக் கண்டித்தும், மின் விபத்துகளைத் தடுக்க உடனே நடவடிக்கை எடுக்கக்கோரியும் மத்தியரசையும் தபால்தந்தி இலாக்காவையும்வற்புறுத்தியும், மின் விபத்திற்குக் காரணமான அதிகாரிகள மீது நடவடிக்கை எடுக்கக்கோரியும் விபத்திற்கு ஆளான பாலசுந்தரம் குடும்பத்திற்கு நஷ்ட ஈடு வழங்கக்கோரியும் லைன் ஸ்டாப் ஊழியர்களுக்கு எலக்ட்ரிக் டெஸ்டர் இரப்பர் கையுறை உட்பட எல்லாக் கருவிகளும் வழங்கக் கோரியும், தொலைபேசி மின் சாரக் கம்பிகளுடையே கார்டு கம்பிகள், மற்றும் குறைந்த பட்சம் மூன்று அடி இடைவெளி அமைக்க கோரியும் ஆர்ப்பாட்டத்தில் கோஷங்கள் எழுப்பப் பட்டன.

#### பொதுக்கூட்டம்

ஆர்ப்பாட்டத்திற்குப் பின்னர், உள்ளூர் தொலைபேசி நிலைய மனமகிழ் மன்றத்தில் பொதுக்கூட்டம் நடந்தது. துணைத்தலைவர் தோழர் ஏ. கன்னியப்பன் தலைமை வகித்தார். தோழர்கள் வேலூர் கிளைச் செயலர் பி. இராமு சென்னைத் துணை கோட்டசெயலர் பி.கிருஷ்ணன் ஈ. நாராயணசாமி, சொக்கலிங்கம், கே ஏ. பரமசிவன் ஆகியோர் பேசினார்கள். கோரிக்கைகளை வலியுறுத்திதீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

---

# 40 ஆயிரம் பீடி தொழிலாளர் வேலையிழப்பு

துர்க்காபூர். நவ. 20—

புருலியாவில் 40 ஆயிரம் பீடித் தொழிலாளர்கள் வேலை இழக்கும் நிலைமை ஏற்பட்டுள்ளது. ஊதியத் தகராறை விசாரிக்க தொழிலாளர் கமிஷனர் அங்கு சென்றுள்ளார்.

---

# விவசாயத் தொழிலாளி குடும்பம் தற்கொலை

திருச்சி. நவ. 20—

பெரம்பலூர் அருகே செல்லியாபாளையம் கிராமத்தில் நேற்றிரவு ஒரு விவசாய தொழிலாளி குடும்பம் வாழ வழியின்றி தற்கொலை செய்து கொண்டது.

30 வயது இளம் காளை மாணிக்கம்.

மாணிக்கம் நாள் பூராவும் விவசாய வேலை செய்து கிடைக்கும் கூலியைக் கொண்டு குடும்பத்தைக் காப்பாற்ற முடியவில்லை.

மனைவியையும் மூன்று குழந்தைகளையும காப்பாற்ற முடியாமல மாணிக்கம மனம் நொந்தார்.

பட்டினி கிடந்து தினம் தினம் செத்துக்கொண்டிருப்பதைவிட ஒரேயடியாக செத்து விடுவதுமேல் என்று மாணிக்கம் முடிவு செய்தார்.

வாழவழியற்ற நிலையில் விரக்தியடைந்த மாணிக்கம் மனைவி மீனும்பாளுக்கும் அருமைக் குழந்தைகள் தனலட்சுமி (வயது 10) கந்தசாமி (8) குமார் (5) ஆகியோருக்கும பாலில் பயிர் பூச்சிமருந்தை கலந்து கொடுத்து விட்டு தானும குடித்துவிட்டார்.

ஐவரும் வீட்டில் பிணமாக் கிடந்தது காலையில் கண்டு பிடிக்கப்பட்டது.

ஒரு விவசாயத் தொழிலாளி குடும்பம் பிழைக்க முடியாமல் பரிதாபகரமாக இறந்ததற்கு யார் குற்றவாளி?

---

# சென்னையில் பருப்பு, மிளகாய் விலை கிடுகிடு உயர்வு

சென்னை, நவ. 21—

சென்னை மார்க்கெட்டில் பருப்பு வகைகள், பட்டாணி, மிளகாய் ஆகியவற்றின் விலை கடந்த வாரத்தைவிட இந்த வாரம் கிடுகிடுவென உயர்ந்துள்ளது.

#### கடலைப் பருப்பு

கடலைப்பருப்பு மொத்த விலையில் 10 ரூபாய் உயர்ந்துள்ளது. மொத்த விலையில 170 ரூபாய்க்கு விற்கப்படும் கடலைப்பருப்புசில்லறையில் லிட்டர் ஒன்று ரூ. 1—50 க்கு விற்கப்படுகிறது.

#### உளுந்தம் பருப்பு

மொத்த விலையில் ரூ. 235-க்கு விற்கப்பட்டு வந்த உளுந்தம்பருப்பு இப்போது 10 ரூபாய் உயர்ந்து ரூ. 245-க்கு விற்கப்படுகிறது சில்லறை விலையில் ரூ. 2—45 முதல ரூ 3—75 வரை விற்கப்படுகிறது.

#### பயத்தம் பருப்பு

பயத்தம் பருப்பு மொத்த விலையில் உயர்ந்து மார்க்கெட்டில் இப்போது ரூ 245-க்கு விற்கப்படுகிறது. லிட்டர் ஒன்றுக்கு சில்லறை விலையில் ரூ 2—60 காசுக்கு விற்கப்படுகிறது.

#### மிளகாய்

மிளகாய் விலையில் கிடுகிடு உயர்வு ஏற்பட்டுள்ளது மொத்த விலையில் மிளகாய் 20 ரூபாய் உயர்ந்துள்ளது. ராமநாதபுரம மிளகாய் ரூ. 280 முதல் ரூ. 300 வரை, பாரி ரக மிளகாய் ரூ. 290 முதல் ரூ. 310 வரை விற்கப்படுகிறது. பேட்டை ரக மிளகாய்க்கு ஏற்பட்டுள்ள கிராக்கியால அந்த ரகம் ரூ. 10 முதல் 15 வரை அதிகரித்துள்ளது.

சில்லறை விலையில் மிளகாய் விலை ரூ. 3 முதல் ரூ. 3—20 வரை விற்கப்படுகிறது.

---

ராஜஸ்தானில் வறட்சி

# மந்தை மந்தையாக ஆடு மாடுகள் வெளியேற்றம்

ஜெய்ப்பூர், நவ. 19—

ஆஜ்மீர், சித்தூர்கள், தூங்கள்பூர், பல்வாரா, உதயப்பூர் மாவட்டங்கள் உள்ளிட்டு வறட்சிப் பகுதிகளிலிருந்து ஆடு மாடுகள் மந்தை மந்தையாக வெளியேறிக் கொண்டிருக்கின்றன.

மனிதர்களுக்கும்சரி,மாடுகளுக்கும் சரி உணவுக்கும், குடி தண்ணீருக்கும் அரசு ஏற்பாடு செய்யத தவறிய தின் விளைவே இது

ராஜஸ்தானில் வறட்சி நிலைமையைஆராய நிபுணர் குழு ஒன்றை அனுப்பி வைக்க மத்திய அரச தீர்மானித்தது. ஆயினும் அவசரத் தன்மையுடன் இக்குழு செயல்படவில்லை ஒருவாரம் ஆகியும் இக்குழு ராஜஸ்தானுக்கேவந்துசேரவில்லை. இதறகுக்காரணம் விமானத்தில் இடம் கிடைக்கவில்லை என்றுஅறிவிக்கப்படுகிறது.

வறட்சிப் பகுதிகளில் கிணறுகளை ஆழப்படுத்த மத்திய அரசிடமிருநது நிதியுதவி கோரியிருந்தும் இன்னும் மத்திய அரசிடமிருந்து பதில் வராத நிலையில் நிவாரண வேலைகளைத் தொடங்க முடியவில்லை.

---

# இடத்துக்குத்தக்கபடி காங்கிரசுடன் உறவாம்

## வலது கம்யூனிஸ்ட் சந்தர்ப்ப வாதம்

திருச்சூர், நவ. 20—

காங்கிரசுடன் தம்முடைய கட்சி நிரந்தர தோழமை கொண்டுவிடவில்லை என்று வலது கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் எஸ். ஏ. டாங்கே இங்கு இன்று கூறினார்.

காங்கிரசுடன் தம்முடைய கட்சியின் நிலை மாநிலத்துக்கு மாநிலம் மாறுபடும். கேரளத்தில் காங்கிரசை ஆதரிக்கும் என்றும் மகாராஷ்டிரத்தில் எதிர்க்கும் என்றும் அவர் கூறினார்.

காங்கிரசின் கொள்கைதான் மாநிலத்துக்கு மாநிலம் மாறுபடுகிறது என்றும் அதனால்தான் நம்முடைய கட்சியும் இடத்துக்குத் தக்கபடி நடந்து கொள்கிறது என்றும் கூறினார்.

பதவிகளைப் பேரம் பேசுவதற்கே காங்கிரஸ் முற்போக்கு என்றும் பிற்போக்கு என்றும் வலது கம்யூனிஸ்ட கட்சி இடத்துக்குத் தக்கபடி வேஷம் போடுவதை டாங்கே இவ்விதம் நியாயப்படுத்த முயன்றார்.

---

# அமைச்சரின் கண்டுபிடிப்பு

அரசு நிறுவனமான எல். ஐ. சி. வீடுகள் கட்டுவதற்காக மிகக் குறைந்த வட்டிக்கு கடன் கொடுக்கிறது. இந்தக் கடனையும் சுலப தவணைகளில் கொஞ்சம் கொஞ்சமாக திருப்பித் தரலாம்.

பொதுவாக வீடு கட்டுவதற்கு வசதியில்லாத ஏழை, நடுத்தர மக்கள், அரசுஊழியர்கள் போன்றவர்களுக்கு உதவவே இத் திட்டம் ஆரம்பிக்கப் பட்டது. ஆனால் இத்திட்டத்தினால் பயனடைந்தோர் யார் தெரியுமா ?

எல். ஐ. சி. நிறுவனம் வீடு கட்ட அளிக்கும் கடன் உதவியினால் பெரும் பணக்காரர்களே பயனடைந்திருக்கின்றனர். இனிமேலாவது எல். ஐ. சி. நிறுவனம் தனது கருணை விழிகளை ஏழை மக்களின் பால் திருப்ப வேண்டும் என்று தற்போதைய ரயில்வே அமைச்சரான திரு டி. ஏ. பாய் பேசியுள்ளார். - 'தி டைம்ஸ் ஆப் இந்தியா' நவ, 13

இதில் என்ன வேடிக்கை என்னவெனறால் எல் ஐ. சி.நிறுவனம் பணக்காரர்களுக்கே எல்லாக் கடன் தொகையையும் அள்ளிக்கொடுத்தபோது அந்த நிறுவனத்தின் தலைவராகவிளங்கியவர் யார் தெரியுமா? அமைச்சர் பெருமான் திரு. டி. ஏ. பாய் தான். நேற்றுவரை அவர் அமைச்சராவதறகு முன்பு எல். ஐ. சி. நிறுவனத்தின் தலைவராகத்தான அவர் இருந்தார்.

# கண்ணோட்டம்

## ஏன்பிறந்தாய்மகனே! ஏன் பிறந்தாயோ?

**பொன்னுடையரேனும் புகழுடையரேனும் மற்(று) என்னுடையரேனும் உடையரோ-இன்னடிசில் புக்களையும் தாமரைக்கை பூநாறும் செய்யவாய் மக்களை இங்கில்லாதவர்.**

இவ்வாறு மக்கட் செல்வத்தைப் பற்றி குறிப்பிட வந்த புகழேந்திப் புலவர், வெகு அருமையாக வெண்பா இயற்றி இருக்கிறார். அதாவது கட்டிக் கட்டி தங்கம் பெட்டி பெட்டியாய் இருந்தால் என்ன? வான் முட்டும் புகழ்படைத்த வல்லவராய் இருந்தால் என்ன? மற்றும் என்ன செல்வம் இருந்துதான் என்ன? இன்சுவை அன்னத்தில் பருப்பு போட்டு, நெய் ஊற்றி, பிசை பிசை என்று பிசைந்து துழாவுகின்ற தாமரை போன்ற கைகளையும், பூ மணக்கும் சிவந்த வாயையும் உடைய குழந்தைச் செல்வம் இல்லாதவர்களை, செல்வம் உடையவர்கள் என்று செப்பிட முடியுமா?—என்று வினவுகிறார் புகழேந்தி ஆஹா! எவ்வளவு அழகாகப் பாடியிருக்கிறார் பார்த்தீர்களா?

அவர் மட்டுமா? அவர் பிறப்பதற்கு பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே, திருக்குறள் இயற்றிய செந்நாப் போதார்:

**குழல்இனிது யாழ்இனிது என்பர்தம் மக்கள் மழலைச்சொல் கேளா தவர்**

என்று அழகு சொட்ட, அந்தம் சிந்த எடுத்துக்கூறியிருக்கிறார் தன் சொந்த மக்களுடைய மழலைச் சொல் இன்பத்திற்கு ஈடு, அந்த வித்வானின் புல்லாங்குழல் இசையிலும் இல்லை; இந்த வித்வானின் வீணைக் கச்சேரியிலும் இல்லை என்பதாகக் கூறுகிறார்.

கவிச்சக்கரவர்த்தி பாரதியாரும், பேசும் பொற்சித்திரத்தைப்பற்றி தேன் சொட்டும் செந்தமிழில் ஆயிரம் பாமாலைகள் தொடுத்துள்ளார்.

ஆம். எல்லாம் உண்மைதான். ஆனால் எந்தக் காலத்தில்?

இப்போது நிலைமை என்ன? மக்கள் செல்வமே செல்வம் என்றும், மழலை இன்பமே இன்பம் என்றும் மதிப்பவர்கள் இன்று யார் இருக்கிறார்கள்?

மத்திய பிரதமர் இந்திராகாந்தி முதல், மாநில முதல்வர் கருணாநிதி ஈறாக, மக்கட் செல்வத்தைப்பற்றி என்ன கூறுகிறார்கள்? அவர்களுடைய குழந்தைகளைப் பொறுத்த மட்டில், அரியானாவில் கார் தொழிற்சாலை... அதற்கு வேண்டிய இயந்திரங்களை வாங்க, அன்னியச் செலாவணி தேடணும்... அதற்காக இந்திய ரூபாய்களைக் கொடுத்து ஹாங்காங்கிலோ, சுவிட்சர்லாந்திலோ மாற்றணும்... இந்திய ரூபாயை எடுத்துவர நகராத வாலாவை நகர்வாலாவாக நகர்த்தணும்!...

அதே போல, இங்கே தமிழ்நாட்டிலே, பிள்ளையோ பிள்ளை படத்திலே நடிக்கவைத்து முன்னேற்றணும்... மாபெரும் ஊர்வலங்களில குதிரை மேலே ஏற்றிவைத்து கண் குளிரப் பார்க்கணும்!

ஆனால், குடிசைவாழ் மக்களின் குழந்தைகளைப் பற்றியோ?......

சீ, தரித்திரங்களா..... இதுக பிறந்துதான், இந்த நாட்டுக்கு இத்தனை பீடைகளும், நெருக்கடிகளும் வந்தன. இனிமேல் பிறக்கப்போறதுகளால் இந்த உலகமே நாசமாகப்போகிறது!

பிறக்கப்போகிறதுகளைப் பிறக்காதபடி "ஸ்டாப்" செய்! "ஹோல்டான" பண்ணு! வயது வந்த ஆண் பெண் அத்தனை பேர்களையும் அடித்து இழுத்து வா! 17 வயது பள்ளி மாணவனாக இருந்தாலென்ன? 70 வயது குடு குடு தாத்தாவாயிருந்தால் என்ன? அத்தனை பேர்களையும் மருத்துவ மனைக்கு இழுத்து வா! அறுத்து அனுப்பு! பட்டிக்காட்டுக் குட்டிச் சுவர்களைக் கூட விடாதே! முக்கோணம் போட்டு சிகப்புச் சாயம் பூசு! அறுவைக்கு ஆள்பிடித்து வர அரசு ஊழியர்களையும் ஆசிரியர்களையும் ஏவு!......மறுத்தால ஏதாவது சாக்கைச் சொல்லி தலையிலே தண்ணீர் ஊற்றி வீட்டுக்கனுப்பு!......

மக்கள் செல்வத்தின் மீதும், மழலைச் சொற்கள் மீதும் இப்படிப்பட்ட இன்பம் தான் இருக்கிறது இன்றைய இந்தியாவில்!......

அதனால்தான் ஏழைத் தாய்மார்கள்:

**இல்லையொரு பிள்ளையென்று ஏங்குவோர் பலர் இருக்க இங்குவந்து ஏன் பிறந்தாய் செல்வமகனே! ஏன் பிறந்தாய் மகனே! ஏன் பிறந்தாயோ?**

என்று தாலாட்டுப் பாட்டிலேயே தரித்திரக் கொடுமையைப்பற்றி பாடுகிறார்கள். அப்படி ஆகிவிட்டது இந்தக் காலம்.

இந்த லட்சணத்தில் நேரு பிறந்த நவம்பர் 14ம் தேதியை "குழந்தைகள் தினம்" என்று ஆண்டுதோறும் கொண்டாடுவதில் மட்டும் குறைச்சல் இல்லை.

ஏழை மக்களுக்குப் பிறந்த குழந்தைகள், பிறக்கும் போதே பாப்பர்களாகப் பிறக்கின்றன! ஐந்து வயது குழந்தைகளாக இருக்கும்போதே பாடுபட்டு வயிற்றைக் கழுவக்கூடிய துர்ப்பாக்கிய நிலைமைக்குத் தள்ளப்பட்டிருக்கின்றன. பூட்பாலிஷ் வேலை......மாடு மேய்க்கிற வேலை......வீடு பெருக்கிற வேலை......சுள்ளி பொறுக்குகிற வேலை......களை எடுக்கிற வேலை......பீடி, சுருட்டு வேலை... இப்படி எத்தனையோ வேலைகள்!......இப்படி நமது நாட்டில் 1½ கோடி குழந்தைகள் வேலை செய்கின்றன!

நமது நாட்டிலே 54 கோடி மக்கள் இருந்தால், அதிலே 10½ கோடிப்பேர் 6 வயதுக்குள் உட்பட்ட குழந்தைகள்! இதில் ஏழைக் குழந்தைகள் ஜப்பான் பிஸ்கோத்து மாதிரி கையும் காலும் குச்சியாக இருக்கின்றன...பானை வயிறு ...ஆடை கந்தல்...இப்படி 5½ கோடி குழந்தைகளுக்கு போஷாக்கே இல்லை...வைட்டமின் சத்து இல்லாததாலே 2½ கோடி குழந்தைகளுக்கு கண் பார்வை இல்லை...சத்து இல்லாததால 5 வயதுக்கு உட்பட்ட குழந்தைகளில் 5 பேருக்கு 2 பேர் செத்து விடுகின்றனர்......

உணவுப் பொருள் விலையும், மருந்து விலையும் ராக்கெட் மாதிரி பறந்தால, ஏழைப்பெற்றோர்கள், தங்கள் குழந்தைகள் சாவதைப் பார்த்துக்கொண்டுதானே இருக்க முடியும்!......

வறுமையின் கொடுமையால் தாயும் தகப்பனும் தற்கொலை செய்து, குழந்தைகளையும் விஷம் கொடுத்துக் கொல்வதை நாம் பார்க்கவில்லையா?

படிப்பு பற்றியோ சொல்லவே வேண்டாம். 1-வது வகுப்பில் 100 குழந்தைகளைச் சேர்த்தால், 5-வது வகுப்பில் 40 தான் தங்குகின்றன. மீதி 60 இடையிலேயே மாடு மேய்க்கப் போய்விடுகின்றன. இது ஆரம்பக்கல்வி.

5-வது வகுப்பிலே 100 குழந்தைகளைப் பார்த்தால், 8-வது வகுப்பிலே 25 குழந்தைகள்தான் மிஞ்சுகின்றன! இதுதான் நடுத்தரக்கல்வி நிலைமை.

பாவாடை, சட்டை, டிரவுசர் சீருடை, புத்தகங்கள், உணவு, இதர செலவுகள் இதை ஏழைகளால தாக்குப்பிடிக்க முடிகிறதா? அதனாலதான் கல்வி ஏணியில் ஏழை மாணவர்கள் ஏறிட முடிவதில்லை.

அப்படியே அடிச்சிப் பிடிச்சி படிச்சு பாஸ் பண்ணினாலும், அப்புறம் வேலை எங்கேடா கோவிந்தா?

நாட்டுச் சித்திரம் இந்த அழகிலே இருக்கும்போது இந்திரா காந்தி சொல்லுகிறார். குழந்தைகள்தான் எதிர்காலச் சிற்பிகள் என்று! 30 வருடங்களுக்கு முன்னே குழந்தைகளின் கண்களிலே காணப்படாத ஒளி, இன்று ஜொலி ஜொலிப்பாகக் காணப்படுகிறதாம்!

கேட்டீர்களா கதையை. சிற்பிகளாம்......ஜொலி ஜொலிக்குதாம்!

ஆம்! பணக்கார வீட்டு பொதுக்கைக்குட்டிகளை வைத்துதான் இந்திராம்மா இப்படிப் பேசுகிறார் போலும்!

ஏழை வீட்டுப் பிள்ளைகளோ, அம்மா பசிக்குது என்ற ஏக்கப் பெருமூச்சுடனே, கீரைத தண்டாக வாடிக் கிடக்கின்றன.

இப்படிப்பட்ட சோரநிலைமை ரஷ்யாவில் உண்டா? சீனாவில் உண்டா? சோஷலிஸ்ட் நாடுகள் எதிலாவது உண்டா?

அதனால்தான் சொல்லுகிறோம், ஏழைக் குழந்தைகளுக்கும் வசதிகளும் வாய்ப்புகளும் கிடைக்க, இந்தச் சுரண்டல் சமுதாயத்தை நொறுக்கு நொறுக்கென நொறுக்கினால்தான் முடியுமென்று...என்ன நாம்சொல்லுவது சரிதானே!

— ஐ. மா. பா.

# மாணவர் ஊர்வலத்தின் மீது போலீஸ் வெறித் தாக்குதல்

# ஒரு மாணவன் மரணம்

## நெல்லையில் நடைபெற்ற அக்ரமம்

**திருநெல்வேலி, நவ. 21 —**

**திருநெல்வேலியில் மாணவர்கள் நடத்திய ஊர்வலத்தை போலீசார் அடித்து கலைத்ததில் ஒரு மாணவர் ஆற்றில் விழுந்து பரிதாபமாக இறந்தார்.**

நேற்று முன் தினம் இரவில் சேவியர் கல்லூரி பேராசிரியர் ஏ. சீனிவாசனையும், அவருடைய இரு சகோதரர்களையும் வீட்டுக்குள் புகுந்து போலீசார் தாக்கியதையடுத்து மாணவர்களும் ஆசிரியர்களும் பொது மக்களும் ஆத்திரமடைந்துள்ளனர்.

இந்தத் தாக்குதலைக் கண்டித்து பாளையங்கோட்டை சவேரியர் கல்லூரியிலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு கொக்கிரகுளம் கலெக்டர் அலுவலகத்துக்கு வந்தனர்.

### 3000 பேர் ஊர்வலம்

சேவியர் கல்லூரிஜான்ஸ் கல்லூரிசக்கத்துல்லா அப்பர் கல்லூரி, பேட்டை இந்துக்கல்லூரி மற்றும் பல பள்ளிகளைச் சேர்ந்த 3000 மாணவர்கள் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். ஊர்வலம் கொக்கிர குளத்திலுள்ள கலெக்டர் அலுவலகம் நோக்கி வந்தது, தாக்கப்பட்ட பேராசிரியருக்கு நியாயம் கோரி மாணவர்கள் கோஷம் எழுப்பினர்.

### ஒரு மணி நேரம் தாக்குதல்

ஆயுதம் தாங்கிய 400 போலீசார் எந்த அசம்பாவித சம்பவமும் நேராதிருந்த போதும் மேலதிகாரியின் உத்திரவின்பேரில் மாணவர் மீது தடியடிப் பிரயோகம் செய்ய ஆரம்பித்தனர். பல மாணவர்கள் காயமடைந்தனர். மாணவர்கள் சிதறி ஓடியும் போலீஸ் விரட்டி விரட்டியடித்தது இந்தத் தாக்குதல் ஒரு மணி நேரம் நடைபெற்றது.

### பாலத்தை மறித்து தாக்குதல்

ஒரு பகுதி மாணவர்கள் தாமிரபரணி ரஸ்தா பாலத்தை நோக்கி விரட்டப்பட்டனர். சுமார் ஆயிரம் மாணவர்கள் பாலத்துக்குள் நுழைந்ததும் பாலத்தின் இரு முனைகளிலும் போலீசார் மறித்துக் கொண்டு கண்மூடித்தனமாகத் தாக்கினர். பாலத்துக்குள் அகப்பட்டுக் கொண்ட சிலர் போலீஸ் வளையத்தை மீறி தப்பமுடிந்தது பலர் தப்ப முடியவில்லை. வெறித் தாக்குதலைத் தாக்குப்பிடிக்க முடியாத ஒரு மாணவன் பாலத்திலிருந்து ஆற்றுக்குள் குதித்து இறந்துவிட்டான்.

இறந்த மாணவன் பெயர் லூர்துநாதன். சவேரியர் கல்லூரியில் பி.காம்., மூன்றும் ஆண்டு படித்து வந்தான். சொந்த ஊர் சேலம். தகப்பனார் பெயர் சித்தன்ன செட்டியார்.

பிரேதத்தைக் கைப்பற்றி மாணவர்கள் எடுத்துச்செல்லும்போது மீண்டும் போலீஸ் தடியடிப்பிரயோகம் நடைபெற்றது.

### அக்கிரமச் செயல்

இந்தச் சந்தர்ப்பத்தில் தங்கள் மீது எந்தக் குற்றச்சாட்டும் வராமல் தப்பிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் போலீசாரே அரசு பஸ் ஒன்றுக்கு பெட்ரோல் ஊற்றி தீவைத்துக்கொளுத்தியதாக மாணவர்கள் தரப்பிலும், பொதுமக்கள் தரப்பிலும் கூறப்படுகிறது.

### வழக்கறிஞர் சங்கத்தின் கண்டனம்

போலீஸ் அக்கிரமத்தைக் கண்டித்து வழக்கறிஞர்கள் சங்கம் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது நூற்றுக்கணக்கான வக்கீல்கள் அணிவகுத்து கலெக்டர் அலுவலகம் சென்று முறையீடு செய்தனர்.

செசன்ஸ் நீதிபதியிடமும் முறையிட்டார்கள். வழக்கறிஞர் சங்கம் இயற்றிய தீர்மானம் ஒன்றையும் நீதிபதி கேட்டு வாங்கிக் கொண்டதாக வழக்கறிஞர்கள் கூறினர்.

### போக்குவரத்து பாதிப்பு

இந்தச் சம்பவத்தையடுத்து நகரில் போக்குவரத்து நின்றுள்ளது. சினிமா காட்சிகளும் ரத்து செய்யப்பட்டன,

### பேராசிரியர் தாக்கப்பட்டதேன்?

மாணவர்களிடமும், ஆசிரியர்களிடமும் கொதிப்புணர்ச்சி ஏற்படுவதற்குக் காரணம் நேற்று முன்தினம் நவ, 19-ல் சவேரியர்கல்லூரி பேராசிரியர் ஏ. சீனிவாசனையும் அவருடைய இரு சகோதரர்களையும் வீட்டில் புகுந்து போலீசார் தாக்கியதேயாகும்.

நவீன மோஸ்தரில் உடையணியும் வழக்கத்தைக் கண்டித்து அந்தப் பேராசிரியர் பேசிக் கொண்டிருக்கும் போது அவ்வழியே போன போலீஸ் இன்ஸ்பெக்டரின் புதல்வர்கள் தங்களைத் தான் பேராசிரியர் குத்திக்காட்டுவதாக நினைத்துக் கொண்டார்களாம். இதற்குப் பின் சாதாரண உடையில் 6 போலீஸ்காரர்கள் பேராசிரியரின் வீட்டுக்குள் பிரவேசித்து பேராசிரியரையும், அவருடைய சகோதரர்கள் இருவரையும் கண்மூடித்தனமாகத் தாக்கியுள்ளனர்.

# ஆந்திராவில் துப்பாக்கிச் சூடு

## 12 பேர் சுட்டுக்கொல்லப்பட்டனர்

ஐதராபாத், நவ. 21—

இந்திரா காங்கிரஸ் ஆளும் ஆந்திராவில் பல இடங்களில் மாணவர்கள் மீது இன்று போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தினர்கள். இதில் 7 பேர் செத்தார்கள்.

ஆந்திராவில் தெலிங்கானா பகுதி மக்களுக்கு அதிக வேலை வாய்ப்புகள் அளிக்க வகை செய்யும் 'முல்கி' சட்ட விதிகளை ரத்து செய்யக்கோரி ஆந்திரப் பகுதி மாணவர்கள் போராட்டம் நடத்தி வருகின்றனர்.

இன்று காலை மாணவர்கள் உட்பட 5 ஆயிரம் பேர் ஓங்கோல் என்ற இடத்தில் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

ஆர்ப்பாட்டக்காரர்களை பார்த்து போலீசார் துப்பாக்கியால் சுட்டார்கள்.

### 3 பேர் சாவு

இந்த துப்பாக்கி சூட்டில் 3 பேர் செத்தனர். 2 பேர் காயம் அடைந்தார்கள்.

துப்பாக்கிச் சூட்டை தொடர்ந்து ஓங்கோல்நகரில் பதட்ட நிலை உருவாகியுள்ளது.

விஜயவாடாவில் இருந்து 20 மைல் தூரத்தில் உள்ள தெனாலி ரெயில்நிலையத்தில் ஆர்ப்பாட்டக்காரர்களை நோக்கி போலீசார் 6 ரவுண்டுகள் துப்பாக்கியால் சுட்டார்கள்.

இதில் 4 பேர் செத்தனர் பலர் காயம் அடைந்தனர்.

இதனால் தெனாலியிலும் பதட்ட நிலைமை ஏற்பட்டுள்ளது.

இதுவரை கிடைத்த தகவலின்படி துப்பாக்கி சூட்டில் 12 பேர் செத்தகாக கூறப்படுகிறது.

# கேரள நிலமீட்பு...

2-ம் பக்கத் தொடர்ச்சி

யன்று, தங்களுடைய பழைய நிலத்தைக் கைப்பற்றி, பல குடிசைகளைக் கட்டினர். இங்கும் போலீஸ் அடக்கு முறை ஏவி விடப்பட்டது.

பெண்கள் உள்பட பலர், போலீஸின் வெறித் தாக்குதலுக்குள்ளாகினர்.

இடுக்கி போலீசார்நடுஇரவில்வந்து, 62 விவசாயிகளை போலீஸ் வண்டியில் ஏற்றிச் சென்று பல மைல்களுக்கு அப்பால் உள்ள வண்டன்மேடு என்ற இடத்தில் இறக்கிவிட்டனர்.

19-ம் தேதியன்று 146 பேர் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டனர்.

### கண்டனம்

நிலத்துக்காக போராடும் நிலமற்ற ஏழை விவசாயிகளை நடுஇரவில் கைது செய்வதுபலமைல்களுக்கும் அப்பால் அவர்களைக் கொண்டு சென்று இறக்கி விடுவதும் - பெண்களையும் குழந்தைகளையும் தாக்குவதுமான போலீசின் அக்கிரமச் செயல்களுக்குப் போராட்டக்குழு வன்மையாகக் கண்டனம் தெரிவித்துள்ளது.

## நெல்லையில்

# போக்கு வரத்து ஸ்தம்பித்தது

திருநெல்வேலி, நவ. 22—

போலீசாரால் மாணவர்கள் தாக்கப்பட்டதைக்கண்டித்தும், அத்தாக்குதல் காரணமாக ஒரு மாணவர் பலியானதைக் கண்டித்தும் நேற்று திருநெல்வேலியே அர்த்தாலில் மூழ்கியது.

காலை 11 முதல் போக்குவரத்து அப்படியே ஸ்தம்பித்தது, எல்லாக் கடைகளும் அடைக்கப்பட்டன. சினிமாக்காட்சிகள் ரத்துசெய்யப்பட்டன.

திருநெல்வேலி டவுன், ஜங்சன் பாளையங்கோட்டை கொக்கிரக்குளம் முதலிய எல்லா இடங்களும் வெறிச்சோடிக் கிடந்தன.

இதற்கிடையில் நகரின் பகுதிகளில ஏராளமான போலீசார் வெறித்தனமான தாக்குதலில் இறங்கினர். சிந்துபூந்துறையில் வீடுகளுக்குள் நுழைந்து அடித்தனர். தட்சிண நாடார் சங்கத்தில் நுழைந்து அங்கிருந்தவர்களை அடித்து நொறுக்கினர் பலரை போலீஸ்லாரிகளில் ஏற்றிச் சென்றனர்.

போலீஸ் அடக்கு முறையைக் கண்டித்து, இங்கு வந்திருந்த போலீஸ்டி.ஐ.ஜி; யை அனைத்துக்கட்சி பிரதிநிதிகள் குழு சந்தித்து மனு ஒன்று அளித்தனர். இத்தனை அசம்பாவிதம் அடக்குமுறைக்குக் காரணமான போலீஸ் இன்ஸ்பெக்டரை சஸ்பெண்ட்செய்யவேண்டுமென்று வற்புறுத்தினர். சஸ்பெண்ட் செய்யாவிட்டால் தொடர்ந்து போராட்டம் நடக்கும் என்றும் அறிவித்தனர்.

இந்த அனைத்துக் கட்சிக் குழுவில் மார்க்சிஸ்ட், காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட், சோசலிஸ்ட் மற்றும் பல கட்சிகளின் பிரதிநிதிகள் உள்ளனர்.

இறந்த மாணவர் லூர்துநாதனின் சடலம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது. இதில் எல்லாக் கல்லூரி, பள்ளிகளைச் சார்ந்த ஆசிரியர்களும், மாணவர்களும, பொது மக்களும், அனைத்துக் கட்சியினரும் கலந்துகொள்வர்.

# கருப்புபண சோதனை தமிழ்நாட்டுக்கு முதலிடம்

சென்னை, நவ. 20—

மத்திய நிதி இலாகா அதிகாரிகள் கருப்புப் பணத்தைப்பிடிப்பதற்காக நடத்தும்சோதனைகளின் எண்ணிக்கையில் தமிழ்நாடு முதலிடம் வகிப்பது தெரிய வந்துள்ளது.

இத்தகைய சோதனைகளில், பல சினிமா நடிக, நடிகையர்கள், தொழிலதிபர்கள், மேலும் ஒன்றிரண்டு மந்திரிகள், நெருங்கிய உறவினர்கள் ஆகியோர்களும உட்பட்டிருப்பதாக நம்பப்படுகிறது.

இதில் மிகவும் சுவாரசியமானதாக, "பூச்சி மருந்து, தெளிப்பதற்கான" ஏற்பாட்டில் வந்த புகாரின் மீது நடத்தப்பட்ட சோதனையேயாகும்.

கடந்த சில மாதங்களில் மட்டும், பல நூறு சோதனைகள் நடத்தப்பட்டதாக விவரம் தெரிந்த தகவல்கள் தெரிவிக்கின்றன.

இந்த சோதனையில் கருப்புப் பணமாக சுமார் 1 கோடிக்கு மேல் கண்டு பிடிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

—எக்கனமிக் டைம்ஸ் (20—11—72)

# முன்னாள் கி.பாக் கவர்னருக்கு ஆயுள் தண்டனை

டாக்கா, நவ. 20—

கிழக்கு பாகிஸ்தான் பங்களா தேசமாவதற்கு முன், அதன் கவர்னராகவிருந்த ஏ. எம். மாலிக் (70) குக்கு இன்று ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. விசேஷ டிரிப்யூனல் ஒன்று 6 நாட்கள் விசாரணைநடத்தியபின் இவ்வாறு தீர்ப்பு வழங்கியது.

பாகிஸ்தானி ராணுவத்திற்குஉடந்தையாகஇருந்து குற்றங்கள் புரிந்ததாக அவர்மீது வழக்கு தொடரப்பட்டது. அந்த் குற்றச்சாட்டுகள் நிரூபிக்கப்பட்டன. 21 பக்க தீர்ப்பு படிக்கப்பட்டபோது அவர் அமைதியற்று காணப்பட்டார். டாக்டர் மாலிக் 70 வயதானவர்.

தீர்ப்புவழங்கப்பட்டவுடன் இரும்புத் தொப்பியணிந்த போலீசாரின் பலத்த காவலுடன் அவர் ஒரு 'வானில்' சிறைச்சாலைக்கு கொண்டு செல்லப்பட்டார். விசாரணை நடைபெற்ற இடத்திற்கு வந்திருந்த மக்கள் கூட்டம அவரை ஏசின. மக்கள் மிகவும் கோபத்துடன காணப்பட்டனர்.

திரு அப்துல் மன்னன் சௌத்ரி தலைமையிலிருந்த விசேஷ டிரிப்யூனல் தண்டனையை விதித்தது. பாகிஸ்தானி ராணுவம இந்திய-வங்கதேச கூட்டுத் தலைமையிடம சரணடைவதற்கு 2 நாட்களுக்கு முன் டாக்டர் மாலிக் கிழக்கு பாகிஸ்தான் (இப்பொழுது வங்க தேசம்) கவர்னர் பதவியிலிருந்து ராஜினாமாச் செய்தார்.

வங்கதேச அரசின் மீது போர் தொடுத்ததாகவும வங்க தேச விடுதலைப் போரில் பாகிஸ்தான் ராணுவத்துக்கு உடந்தையாக இருந்ததாகவும் அவர் மீது குற்றஞ்சாட்டப்பட்டது.

விசாரணையின்போது பிராசிகியூஷன் தரப்பில 28 பேர் சாட்சியம் அளித்தனர்.

டாக்டர் மாலிக்கின் கீழிருந்த 9 மந்திரிகள் இப்பொழுது காவலில் உள்ளனர். அவர்களில் இருவர் இன்று வேறொரு விசேஷ நீதிமன்றத்தில் விசாரிக்கப்பட்டனர்.

# தி. மு. க. வில் பிளவு

( 1 - ஆம் பக்கத் தொடர்ச்சி )

சூதாடிகள், கொள்ளை லாபக் காரர்கள், சுரண்டல்பேர் வழிகள் ஆகியோரின் பிடிப்பு மேலும் வலுவடைந்துள்ளது. வறுமையும் வேலையில்லாத் திண்டாட்டமும் மேலும் மேலும் பெருகி வருகின்றன. நிலத்திலிருந்து விவசாயிகள் வெளியேற்றப்படுகின்றனர். இந்த அனுபவத்திலிருந்து சரியானபாடம் கற்று கொள்ளுமாறும், அரசியல் விழிப்புணர்ச்சியுடன் செயல்படுமாறும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின தமிழ் மாநிலக் குழு மக்களை வேண்டிக் கொள்ளுகிறது. இவ்வாறு உணர்ந்து செயல்படுவதின் மூலமே தங்களுடைய வாழ்க்கையை மக்கள் மாற்றியமைக்க முடியும். இந்த நாட்டுக்குப் பிரகாசமானதொரு எதிர்காலத்தை உருவாக்க முடியும்.

## தோழர்களுக்கு

இந்தத் தீர்மானத்தின் அடிப்படையில் வெகுஜன அரசியல் இயக்கத்தினை நடத்துமாறு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்களை தமிழ மாநிலக்குழு அறை கூவி அழைக்கிறது. ஜனநாயக முன்னேற்றத்திற்கான இத்திட்டத்துக்கு ஆதரவாக திரளான மக்களை திரட்டுமாறு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு அறை கூவி அழைக்கிறது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (-13 முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே. முத்தையா.